Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM

# ஸ்ரீராமாநுஜன் 226

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி *—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

12—10—1967ல் வெளியிடப்பட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன் — 226



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 19 | ப்லவங்களு ஐப்பசி மாதத்திற்காக 15-10-67ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 11 |
|---|---|---|


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

ஸ்ரீ ராமாநுஜன் தொடங்கின நாள் முதலாக ஸஞ்சிகை தோறும் ஒவ்வொரு பாசுரமாக உரை செய்து வெளியிட்டுவந்த இராமாநுச நூற்றந்தாதியும் திருவாய்மொழி நூற்றந்தாதியும் கீழ் ஸஞ்சிகையோடு தலைக்கட்டியாயிற்று. இனி இந்த ஸஞ்சிகை முதலாக நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி ஒவ்வொரு பாசுரமாக (உரையுடன்) வெளியிடப்பட்டு வருமென்று ஏற்கெனவே தெரிவித்திருந்தபடி தொடக்கமாகிறது. பொய்கையாழ்வார் முதலாகத் திருமங்கையாழ்வார் முடிவாகவுள்ள ஆழ்வார்கள் பதின்மரும், பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையான ஆண்டாளும் பாடிய திவ்வியப் பிரபந்தங்களில் மங்களாசாஸனம் செய்யப்பெற்றவை நூற்றெட்டுத் திருப்பதிகளாம். சோழ நாட்டில் நாற்பது; பாண்டி நாட்டில் பதினெட்டும்; மலை நாட்டில் பதின்மூன்று; நடுநாட்டில் இரண்டு; தொண்டை நாட்டில் இருபத்திரண்டு; வட நாட்டில் பன்னிரண்டு; திருப்பாற்கடல், திருநாடு என்பன நூற்றெட்டுத் திருப்பதிகளாகக் கருதப் படுகின்றன. ஒவ்வொரு திருப்பதிக்கும் ஒவ்வொரு செய்யுளிட்டுத் துதி செய்வது இப்பிரபந்தம். முழுதும் அந்தாதித் தொடைவாய்ந்த வெண்பாவினல் அமைந்தது. முன்னுரையாகச் சில விஷயங்கள் கேளீர். இவ்வந்தாதி நூலானது 'திவ்வியகவிபிள்ளைப் பெருமாளையங்கார்' என்று பிரசித்தி பெற்ற அழகிய மணவாளதாசர் இயற்றிய அஷ்டப்பிரபந்தத்திலொன்று. அவ்வஷ்டப் பிரபந்தம் இலக்கிய நூல்களுள் மிகச் சிறந்து விளங்குவது. "சொல்நோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும் துறையின் நோக்கும் எங்நோக்குங்காண இலக்கியமாவது" இது.

திருவரங்கக் கலம்பகம்.
திருவரங்கத்து மாலை.
திருவரங்கத் தந்தாதி.
சீரங்கநாயகரூசல்.
திருவேங்கடமாலை.
திருவேங்கடத்தந்தாதி
அழகரந்தாதி.
நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி.

என்னுமிவை அஷ்டப்பிரபந்தமென வழங்கப் பெறும். ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத் தலைவரான எம்பெருமானுர் அருளிச் செய்த சரணுகதிகத்யம், ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம் என்னுமிவை பிற்காலத்தவர்களால் கத்யத்ரயம் என வழங்கப் பட்டது போலவே இப்பிரபந்தங்களும் பிற்பட்டவர்களால் அஷ்டப் பிரபந்தமென்றொரு தொகுதியாக வழங்கப்பெற்றது. எனவே, நூலாசிரியர் அஷ்டப் பிரபந்தமென்று பெயரிட்டாரல்லர் என்றதாயிற்று. "அஷ்டப்பிரபந்தம் கற்றவன் அருமைப் புலவன்" என்னும் வழக்கச் சொல்லினுல் இதன் அருமைபெருமை விளங்கும். அந்தாதி பாடுதலிலும், யமகம் திரிபு சிலேடை முதலிய சொல்லணிகளையிட்டுப் பாடுதலிலும் இவ்வாசிரியர் நிகரற்ற நிபுணர்.

கூரத்தாழ்வான் திருக்குமாரரும் உலகம் நிறைந்த புகழாளருமான பட்டருடைய திருவடிகளை ஆச்ரயித்து உய்ந்தவரான இவ்வாசிரியர்க்கு ஆழ்வார்களிடத்திலும் ஆசிரியர்கள் பக்கலிலும் அளவு கடந்த பக்தி விளங்குவது ஆச்சரியமன்று. பெரும்பாலும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் பின்பற்றியே இவ்வஷ்டப்பிரபந்தம் அவதரித் துள்ளது. இவ்வாசிரியர் தென்மொழியிற்போலவே வடமொழியிலும் தேர்ச்சி பெற்றவர் என்பது இவரது நூல்களினுல் நன்கு விளங்கும். ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு இவ்வஷ்டப்பிரபந்தம் நிதிபோன்றதென்பர். ... ... ❁

## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியின் சிறப்புப்பாயிரம் (தனியன்.)

ஏற்றமண வாள ரிசைத்தாரந் தாதிவெண்பா
தோற்றக்கே டில்லாத தொன்மாலைப்—போற்றத்
திருப்பதியா நூற்றெட் டினையுஞ்சே விப்போர்
கருப்பதியா வண்ணமுண்டா க.

(கருத்து.) திவ்ய தேசங்கள் நூற்றெட்டையும் ஸேவிப்பவர்கள் மீண்டு மீண்டும் கர்ப்பபிண்டத்தில் சேராதபடிக்கு [பிறப்பின்றி முத்திபெறுமாறு] பிறப்புமிறப்புமில்லாத புராண புருஷனைச் சொல்லித் துதிக்கும்படியாக, பொருந்திய ஞானசக்திகளையுடைய அழகிய மணவாளதாசர் வெண்பாவினுலாகிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியைப் பாடினுர் என்றவாறு. ... .. ... ❁

## — பிரபந்தத் தொடக்கம் —

### ஆழ்வார்கள் பன்னிருவர் காப்பு.

பொய்கைபூ தன்பேயார் பொன்மழிசைக் கோன்மாறன்
செய்ய மதுரகவி சேரர்பிரான்—வையகமெண்
பட்டர்பிரான் கோதைதொண்டர் பாதப் பொடிபாணன்
கட்டவிழ்தார் வாட்கலியன் காப்பு.

(கருத்து.) பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் குணசாலியான மதுரகவியாழ்வார் குலசேகராழ்வார் உலகத்தாரால் நன்கு மதிக்கப்பெற்ற பெரியாழ்வார் ஆண்டாள் தொண்டரடிப்பொடியாழ்வார் திருப்பாணுழ்வார், விகஸித்த மாலையையணிந்தவரும் வாட்படையையுடையவருமான திருமங்கையாழ்வார் ஆகிய பன்னிருவர் நமக்கு ரக்ஷகராகுக. ... ... ... ❋

### நம்மாழ்வார் காப்பு.

பிறவாத பேறு பெறுதற்கெஞ் ஞான்றும்
மறவா திறைஞ்சென் மனனே !—துறவாளன்
வண்குருகூர் வாவி வழுதிவள நாடுடைய
தண்குருகூர் நம்பிதிருத் தாள்.

(கருத்து.) எனது நெஞ்சமே! விஷய விரக்தி பூண்டவரும் அழகிய நீர்ப் பறவைகள் உலாவப்பெற்ற ஜலாசயங்கள் சூழ்ந்த பாண்டிநாட்டுத் தலைவருமான நம்மாழ்வாருடைய திருவடிகளை மீண்டு மீண்டும் பிறவாமையாகிற பேறுபெறுதற்காக எப்போதும் மறவாமல் வணங்கு. மூன்ருமடியில், குருகு ஊர் என்று பிரியும். ... ❋

### எம்பெருமானுர் காப்பு.

முன்னே பிறந்திறந்து மூதுலகிற் பட்டவெல்லாம்
என்னே மறந்தனையோ என்னெஞ்சே!—சொன்னேன்
இனியெதிரா சன்மங்கள் இன்றுமுதல் பூதூர்
முனியெதிரா சன்பேர் மொழி.

(கருத்து.) எனது மனமே! இதற்கு மூற்காலமெல்லாம் பிறப்பதுமிறப்பதுமாகி அநாதி ஸம்ஸாரத்தில் பட்டபாடுகளையெல்லாம் மறந்துவிட்டாய் போலும்; உன் பேதைமையை என் சொல்லுவது? உனக்கு ஒருறுதி கூறுகின்றேன்; (அதாவதென்னென்னில்;) இன்று தொடங்கிப் பெரும்பூதூர் மாமுனியாகிய எதிராசருடைய திருநாமங்களை யோது; (அங்ஙனம் செய்தால்) பிறவிகள் இனி உனக்கு உண்டாகமாட்டா. ... ❋

### கூரத்தாழ்வான் காப்பு.

முக்கால மில்லா முகில்வண்ணன் வைகுந்தத்து
எக்காலஞ் செல்வா னிருக்கின்றேன்—தக்காரெண்
கூரத்தாழ் வானடியைக் கூடுதற்கு நாயடியேன்
போரத்தாழ் வானசடம் போட்டு.

(கருத்து.) நீசனுனவடியேன் மிக இழிவான ஜடப்பொருளாகிய இவ்வுடலை இங்கு விட்டிட்டு யோக்யர்கள் சிந்திக்கும் கூரத்தாழ்வான் திருவடிகளைச் சேர்வதற்கு, காலம் நடையாடாத எம்பெருமானது திருநாட்டிலே என்றைக்குச் சென்று சேரப் போகிறேனே? இந்நூலாசிரியரான ஐயங்கார் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவ ராதலால் அவ்வாசிரியருடைய திருத்தகப்பனுரென்னுங் காரணத்தினுலும், தமக்குத் தந்தையான அமுதனுருடைய ஸாக்ஷாதாசார்யரென்னுங் காரணத்தினுலும் கூரத்தாழ் வானைத் துதித்தபடி. பரமபதம் சேர்தலை ஆசார்யன் திருவடி சேர்தலாக வழங்குகிற ஸம்பிரதாயம் இச்செய்யுளில் தெரிவிக்கப்பட்டமை காண்க. உடல் அறிவில்லாத பொருளாதலால் ஜடமெனப்பட்டது. (ஈற்றடி: போர, தாழ்வு, ஆன, சடம்.)

ஸ்வாசார்யரான பட்டர் காப்பு.

நான்கூட்டில் வந்தவன்றே நானறியா நன்மையெல்லாம்
தான்கூட்டி வைத்தநலந் தான்கண்டீர்—ஆங்கூட்டச்
சிட்டருக்கு வாய்த்த திருவரங்க னின்னருளால்
பட்டருக்காட் பட்ட பயன்.

(கருத்து.) திரள் திரளான மஹான்களுக்குப் பாக்கியமாகவாய்த்த ஸ்ரீரங்கநாத னுடைய நிர்ஹேதுக கிருபையினுல், நான் இவ்வுடலோடு வந்து பிறந்தநாள் தொடங்கி நானறியாத நலங்களையெல்லாம் தான் உண்டாக்கிய நன்மையென்பது ஸ்ரீ பராசரபட்ட ரென்னுமாசாரியர்க்கு சிஷ்யனுக அமையப்பெற்றதாகிய பயனும். ...

—திருப்பதிகளின் தொகுப்பு—

ஈரிருப தாஞ்சோழம் ஈரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் ரும்மலைநா டோரிரண்டாம்—சீர்நடுநா
டாறேடீ ரெட்டுதொண்டை அவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றுக் கொள்.

(கருத்து.) சோழ நாட்டிலுள்ள திருப்பதிகள் நாற்பதாகும்; பாண்டி நாட்டி லுள்ள திருப்பதிகள் பதினெட்டாகும்; மலையாள நாட்டிலுள்ள திருப்பதிகள் பதின்மூன்ருகும்; சிறந்த நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டாகும்; தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டாகும்; தூரத்திலுள்ள வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண் டாகும். சிறப்பாகக் கூறப்படுகிற திருநாடு ஒன்ருகும்; ஆக நூற்றெட்டுத் திருப்பதிகள்.

— இனி திருப்பதிகளின் பாடல் தொடக்கம். —

திருவரங்கம் பெரிய கோயில்.

சீர்வந்த வுந்தித் திசைமுகனு லல்லாதென்
சோர்வந்த சொல்லில் சுருங்குமோ—ஆர்வம்
ஒருவரங்கங் கோயில் உகந்தவரை யாள்வான்
திருவரங்கங் கோயிற் சிறப்பு.

| | | | |
|---|---|---|---|
| ஒருவர் அங்கு அங்கு ஆர்வம் ஓயில் | ஒருவர் அந்தந்த விஷயாந்தரங் களில் ஆசை யொழியப் பெற்றால் | சீர் வந்த உந்தி திசை முகனல் அல்லாது | அவனது சிறந்த நாபீ கமலத் தில் தோன்றிய பிரமனு லல்லது |
| அவரை உகந்து ஆ ள் வா ன் திரு அரங்கம் கோயில் சிறப்பு | அங்ஙனம் பற்றற்ற அன்பரை உகந்து ஆட்கொள்பவனு கிய பெருமானது திருவரங் கப்பதியின் சிறப்பானது | என் சோர் வந்த சொல்லில் சுருங்குமோ? | எனது குற்றம் மலிந்த சொல் லால் சுருக்கமாகவேனும் சொல்ல இயலுமோ? |

'எம்மாண்பினயன் நான்கு நாவினலுமெடுத்தேத்தி யீரிரண்டு முகமுங் கொண்டு எம்மாடு மெழில் கண்களெட்டினேடும் தொழுதேத்தியினிதிறைஞ்ச நின்ற' என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரத்தையுட்கொண்டு முன்னடிகள் பேசப்பட்டன. இந்நூலின் செய்யுட்கள்தோறும் பின்னிரண்டடிகளில் திரிபு என்னுஞ் சொல்லணி அமைக்கப் பெற்றுள்ளது. ஈற்றடியில் 'திருவரங்கங் கோயில்' என்ன வேண்டி மூன்ருமடியில் 'ஒருவரங்கங் கோயில்' என்ற சொல்தொடரை அமைத்தார்; பதம் பிரிப்பது வேறு. இங்ஙனமே செய்யுள்தோறும் கண்டுகொள்க. ஒருவரங்கங்கோயில், திருவரங்கங்கோயில் என்று யமகமாக இருந்தாலும் முன்னே (ஒருவர் அங்கங்கு ஓயில்) என்றும், பின்னே (திருவரங்கம் கோயில்) என்றும் பிரித்துப் பொருள்கொள்ள வைத்தது கவியின் சாதுரியம். மேலெங்கும் இங்ஙனமே காண்க.

திருவரங்கம் பெரிய கோயிலென்றும், நம்பெருமாள் ஸன்னிதியென்றும் பெரியோர்கள் வழங்கப்பெற்ற ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தின் பெருமை புராணங்களில் கூறப் பட்டதிருக்கட்டும். ஆழ்வார்கள் பதின்மரும் மங்களாசாஸனம் செய்யப் பெற்றதாய் ஆசாரியர்களனைவரும் நித்யவாஸம் செய்து வாழ்ந்தவிடமான இத்தலம் பூலோக வைகுண்டமென்றன்றே போற்றப்பட்டு வருகின்றது. "ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய" என்றும் "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ" என்றும் எண்டிசையும் முச்சந்தியும் வாழ்த்தும் பெருமையும் இத்தலத்திற்கேயாயிற்று. இங்ஙனே ஸ்ரீ வைஷ்ணவர்கள் போற்றும் பெருமைமட்டுமன்றிக்கே ஸ்ரீ ராமாயண பாராயணம் செய்வோரனைவரும் *காவேரீ வர்த்ததாம் காலே காலே வர்ஷது வாஸவ:, ஸ்ரீரங்கநாதோ ஜயது ஸ்ரீரங்கஸ்ரீச் ச வர்த்ததாம்* என்று இத்தலமொன்றுக்கே மங்களாசாஸனம் செய்து போருவது இதன் ஒப்புயர்வற்ற பெருமையை விளக்கும். *தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கந் திருப்பதி யென்று பெரியாழ்வார் பாடின பாசுரம் மிகவினி தன்றே. ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை செங்கோல் செலுத்துமிடமான இத்தலத்தின் பெருமையை நாம் பன்னியுரைக்க வேணுமோ?

இத்திருப்பதிக்குப் பதிகம் பாடினவர்கள் நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் என்னுமிவர்கள். தொண்டரடிப் பொடியாழ்வாரும் திருப்பாணாழ்வாரும் தங்கள் திவ்யப் பிரபந்தங்களைத் திருவரங் கனுக்கே யாக்கினர். இவ்வரங்கனது திவ்ய குணப்பெருமையைப் பெரியாழ்வாருடைய பாசுரமொன்றுகொண்டு பேசியநுபவிப்போமாக. அடுத்த பக்கங்கள் காண்க.

2

# திருவரங்கநாதன் திவ்யகுணானுபவம்

"தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்*
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர்போலும்*
மன்னுடையவிபீடணற்காய் மதிளிலங்கைத்திசைநோக்கி மலர்கண்வைத்த*
என்னுடையதிருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்காளாவரே.

(பெரியாழ்வார் திருமொழி 4—9—2)

திருமகள் கொழுநனுன எம்பெருமான் தான் பரமகாருணிகனுயிருக்கச் செய்தேயும் அவரவர்கள் செய்யும் பிழைகளுக்குத் தக்கபடி தண்டிக்கின்றவனுயுமிருக்கையாலே அடிபணிந்தவர்களும் தம் தம் அபராதங்களுக்குத் தகுந்தவாறு பிராயச்சித்தங்களைச் செய்து கொண்டாலல்லது அவர்களைத் திருவுள்ளம் பற்றுவதில்லை யென்று விரதங் கொண்டிருப்பன். அப்போது "ஸஹதர்மசரீம் சௌரேஸ ஸம்மந்த்ரித ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யம் அஜ்ஞாதநிக்ரஹாம்." என்கிறபடியே அநுக்ரஹமே வடிவெடுத்தவளும் நிக்ரஹமென்பதை ஒருபோது மறியாதவளுமான நம்மன்னை ஸ்ரீ மஹா லக்ஷ்மியானவள் "கிமேதந் நிர்தோஷ: க இஹ ஜகதீதி த்வமுசிதைருபாயைர் விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா ததஸி ந:" [ஸ்ரீகுணரத்நகோசே] என்கிறபடியே புருஷகார க்ருத்யத்தைச் செய்து அபராதி சேதநர்களையும் 'இவர்கள் அணுகிவந்தார்களே' என்பதுவே காரணமாக எம்பெருமானோடு கூட்டுகிருள். அப்படிப்பட்ட புருஷகார பலத்தாலே தலையெடுக்குங்குணங்களையுடையனுன ஸர்வேச்வரனும் அந்த சேதநர்களைத் திடமாகத் திருவுள்ளம் பற்றுகிறன். பிறகு பிராட்டியானவள் "இந்த ஆர்த்ராபராதி சேதநர்களை நமது கணவன் திருவுள்ளம் பற்றினதுவிது நம்முடைய நிர்ப்பந்தத்திற் காகவேயா? அல்லது தன்னுடைய திடமான அன்பினலேயா?" என்று பரீக்ஷிக்கப் பார்க்கிருள். தன்னுடைய நிர்ப்பந்தத்தாலே ஸ்வீகரித்ததாகில் ஒருகால் இவர்களைக் கைவிட்டு விடவுங்கூடும். அப்படியல்லாமல் நிஜமான அன்பினுல் ஸ்வீகரித்ததாகில் ஒருநாளும் கைவிட நேராது. ஆகவே, இந்த பரீக்ஷை அவசியமென்று தோன்றிப் பிராட்டி, தானே புருஷகாரம் செய்து கூட்டிவைத்த சேதநர்கள் விஷயமாகவே சில குற்றங்களை யெடுத்துரைக்கத் தொடங்குகிருள்;

(பிராட்டி) 'நாதா! நான் ஏதோ ப்ரமித்து இவர்களுக்காக உம்மிடம் சிபார்சு செய்து மன்றாடிச் சேர்ப்பித்தேன்; பிறகு ஆராய்ந்து பார்த்தவளவில் இவர்கள் அளவு கடந்து அஸஹ்யாபராதங்களைச் செய்தவர்களென்று நன்றாய்த் தெரிய வருகின்றது. ஆகையாலிவர்களைக் கைக்கொள்ளாது தள்ளி விடுவதே நலமென்று தோன்றுகிறது' என்கிருள்.

எம்பெருமான் அதுகேட்டு மறுமொழி கூறுகின்றான்—'பிராட்டியே! இவர்கள் உன்னடியார்களாயிருந்த போது ஒருகால் குற்றங்களைச் செய்திருக்கக்கூடும்; என்னடியார் களான பின்பு ஒரு போதும் குற்றஞ்செய்யார்கள்' என்று.

பிராட்டி இதுகேட்டு "நாதா! நீர் உண்மையை க்ரஹிக்கவில்லை. இவர்கள் குற்றமே வடிவெடுத்தவர்கள்; ஒரு க்ஷணகாலமும் இவர்களால் குற்றம் செய்திருக்க

முடியாது. நீர் சிறிது விமர்சித்துப் பார்க்கவேணும்; குற்றத்திற்குத் தக்கபடி தண்டனை செய்தேயாகவேண்டும்' என்கிருள்.

அப்போது எம்பெருமான் கூறுகின்றான்—'என்னடியார் குற்றஞ்செய்யார் களென்று நான் திண்ணமாகவெண்ணுகிறேன். குற்றவாளர்களே யிவர்கள் என்னில் குற்றத்தையே நற்றமாகக் கொள்ளுகிறேன் போ-என்று.

இப்படி பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஒரு ஸம்வாதம் நிகழ்ந்ததாக வைத்துப் பெரியாழ்வார் பாசுரம் பாடியுள்ளார். இந்த ஸம்வாதத்திலுல் எம்பெருமானுடைய வாத்ஸல்யாதிசயமும் அப்ரகம்ப்யமான பக்தாநுக்ரஹ மஹிமையும் ப்ரகாசப்படுத்தப் பட்டனவாகின்றன. தோஷங்களிலும் குணத்வபுத்தியே வாத்ஸல்ய மென்று பூர்வா சார்யர்கள் நிர்ணயித்தார்கள். இந்த நிர்ணயத்தை ச்ருத ப்ரகாசிகாசார்யர் சரணாகதிகத்ய வ்யாக்கியானத்திலும் ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகையிலும் ஸுஸ்பஷ்டமாக அநுக்ர ஹித்திருக்கிருர். அஃதிருக்கட்டும்.

அவரவர்களின் அபராதங்களுக்குத் தக்கபடி தண்டிக்குமியல்வினனை எம்பெருமான் சில ஸமயங்களில் சிலர் திறத்தில் "செய்தாரேல் நன்று செய்தார்" என்று அருளிச்செய்கிருனென்று ஆப்ததமரான ஓராழ்வார் அருளிச்செய்திருப்பது அபலிக்க முடியாமலிருக்கின்றது. பெருமாளுக்கும் பிராட்டிக்கும் இப்படியொரு ஸம்பாஷணை நடந்தபோது ஆழ்வார் கேட்டுக் கொண்டிருந்தாரோ வொன்று இவரே கற்பனையாகக் கட்டுகிற கதைதானேயிது என்றும் சிலர் சொல்லுவதுண்டு. அவர்களுக்கு நாம் இரண்டு விதமாக பதில் சொல்லுகிறோம். *தத் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி* என்று வரங்கொண்ட வான்மீகி முனிவரிற் காட்டிலும் அதிசயித்த வரம் பெற்ற ஆழ்வார்கள் உள்ளது உள்ளபடியே வெளியிடுவார்களேயொழிய கற்பனையாக அணுவளவும் சொல்லார்கள். அருளிச்செயல்களில் விச்வாஸமில்லாதவர்களுக்கு நாம் இங்கே பதில் சொல்ல அவசியமில்லை—என்பதாக ஒரு ஸமாதானம். (2) பிராட்டிக்கும் பெருமாளுக்கும் உண்மையாக இப்படியொரு ஸம்பாஷணை நடந்ததில்லை; ஆழ்வார் தாமே கற்பனை செய்த ஸம்வாதமேயிது என்று கொண்டாலும் குறையில்லை. இப்படி யொரு ஸம்பாஷணையையிட்டுப் பேசுகிற ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்று பார்க்கவேணும். நிஷ்ப்ரயோஜநமாகவா ஒன்று பேசி வைப்பராழ்வார்? திவ்ய தம்பதி களுக்கு ஒரு ஸம்பாஷணை நடந்ததாகத் தாமே கல்பனை செய்தாலும் அதிலிருந்து ஒரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டருளக் கருதினாராழ்வார் என்று இசைந்து தீரவேண்டுமே. அந்த சாஸ்த்ரார்த்தம் எது? என்று கண்டறிதல் வேண்டும்.

இப்பாசுரத்தின் முதலடியில் தாமரையாள் சிதகுரைத்ததாகச் சொல்லி, மேல் இரண்டாமடியில் எம்பெருமானுடைய வார்த்தைகளை இரண்டு வகையாக வைத்திருக் கிருர். 'என்னடியார் அது செய்யார்' என்பது முதல் வார்த்தை; 'செய்தாரேல் நன்று செய்தார்' என்பது இரண்டாம் வார்த்தை. இவ்விரண்டு வார்த்தைகள் ஏதுக்கு? தாமரையாள் சிதகுரைத்தவுடனே எம்பெருமான் 'என்னடியார் செய்தது எனக்கு நன்றே' என்று ஒரே வார்த்தையாகச் சொல்லி முடித்திருக்கலாமே; என்று இதை அவசியம் விமர்சிக்கவேணும்.

விமர்சிப்போம்: இரண்டு வார்த்தைகளின்றிக்கே ஒரே வார்த்தையாக முடிந்திருக்குமாயின் சாஸ்த்ரார்த்த க்ஷோபமுண்டாகிவிடும். பக்தர்கள் செய்யும் பாபங்களெல்லாம் நியமேந எம்பெருமானுக்கு போக்யமாகி விடுவதாய் ஒரு அபஸித்தாந்தம் செய்ய ப்ராப்தமாகும். 'என்னடியார் அது செய்யார்' என்கிற முதல் வார்த்தையானது பகவத் பக்தர்கள் பாபஞ்செய்யக் கூசியே வர்த்திக்க வேணுமென்று தெரிவிக்கவே தோன்றியது. ப்ராமாதிகமாகவோ அகதிகமாகவோ தோஷங்கள் செய்ய நேர்ந்து விட்டால் அவற்றில் தனக்கு தோஷபுத்தியுண்டாகாதென்று தன் குண விசேஷத்தையும் காட்டவேண்டி இரண்டாவது வார்த்தையாக *செய்தாரேல் நன்று செய்தார்* என்பது நிபந்திக்கப்பட்டது. ஆக இப்படிப்பட்ட இரண்டு சாஸ்த்ரார்த்தங்களையும் ப்ரகாசப்படுத்துவதே திவ்ய தம்பதிகளின் ஸம்பாஷணையாக வைத்த இந்தப் பாசுரத்திற்கு முழு நோக்கு. இதுவன்று எனின், வேறு எது? என்பதை ப்ராமாணிகமார்க்கத்திற் பேச வேண்டும்.

"நன்று செய்தாரென்பர்" என்று நிறுத்தாமல் "என்பர் போலும்" என்று சொல்லி வைத்திருக்கையாலே வஸ்து வ்ருத்தியில் நன்றன்று என்றதாகத் தேறிவிட்டதாய்ச் சிலர் கருதுகின்றார்கள். இது த்மிழ் மரியாதைக்குச் சிறிதும் இணங்கியதன்று. "அணியார் வீதியழுந்தூர் எந்தை பெருமானுர் மருவி நின்ற ஊர் போலும்" [பெரிய திருமொழி 7-5-1] என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்கிறார். இங்கு ஊர்போலும்' என்கையாலே வஸ்து வ்ருத்தியில் ஊரன்று என்கிற வியாக்கியானமே பிறர் செய்ய வேண்டியதாகும். போலும் என்றவிது (என்பர்) என்றதோடு சேர்ந்திராமல் (நன்று) என்றதோடாவது சேர்ந்திருந்தால் ஒருவேளை இவர்கள் சொல்லும் அர்த்தத்திற்கு இடமிருக்கலாம். ஆழ்வாருடைய ப்ர யோ க ம் அப்படியில்லை. போலுமென்பது *என்பரோடு சேர்ந்திருக்கையாலே, நன்று செய்தாரென்று பெரிய பெருமாள் சொல்லவில்லை என்பதாக ஒருவாறு பொருள் கூறவேண்டும். அப்படியே கூறுகிறோமென்னில் தன்னடியார் திறத்தகத்துச் சிதகுரைத்த தாமரையாள் எந்த அபிப்ராயத்தோடு சிதகுரைத்தாள்; அடியார்களை எம்பெருமான் உதறித் தள்ளிவிட வேணுமென்கிற அபிப்ராயங் கொண்டா சிதகுரைத்தாள்? அதற்கு ப்ரஸக்தியில்லையே. எம்பெருமான் பக்கலிலிருந்து ரஸகனமான வார்த்தை வெளிவருமென்றும் அதைச் செவிகுளிரக் கேட்கவேணுமென்றும் பாரித்தன்றோ சிதகுரைத்தது. 'என்னடியார் செய்தது தப்புத்தான்' என்று எம்பெருமான் சொல்லிவிட்டதாகவே வைத்துக் கொள்வோம். பிறகு அந்த அடியார்களின் கதி என்னுயிற்றென்று கேட்க நேருமே. ப்ராயச்சித்தம் செய்து கொண்டு வாருங்கள் என்று சொல்லி உதறித்தள்ளிவிட்டானு? அல்லது, சித்திரகுத்தன் கருணையிலேறிய சூழ்வினைகட்குத் தக்கபடி நரகவேதனைகளை யநுபவிக்குமாறு சொல்லித் துரத்தி விட்டானு? என்று கேட்க வேண்டிவரும். இத்தகைய வினுக்களும், இவற்றுக்கு வெளிவரக் கூடிய விடைகளும் மிக வீரஸமேயாகும். ஆழ்வார் திருவுள்ளமுவந்து அநுபவித்த திருக்குணத்தை ரஸித்துப் பேசியுய்வோம். இப்பாசுரத்தின் பின்னடியில் *மன்னுடையவிபீடணற்காய்* என்று ஸ்ரீ விபீஷணுழ்வானுக்கருள்செய்த செய்தியை நினைப்பூட்டியிருக்கையாலே. அடுத்தபடி அதை விவரிக்கும் முகத்தால் செய்தாரேல் நன்று செய்தார்' என்றதன் பொருளுண்மையை நிலைநாட்டுவோம். ... ... 

# அபயப்ரதானஸாரத்தில் ஓர் அருமையான பொருள்.

நிகமாந்தமகாகுரு பணித்த அபயப்ரதானஸாரத்தில் சரண்யசீலப்ரகாசமென்கிற ஐந்தாமதிகாரத்தில் பெருமாள் விபீஷணாழ்வானைப் பரிக்ரஹிக்கும் விஷயமாகத் தாம் அபூர்வமான வொரு அபிப்ராயத்தை வெளியிட்டதாக வேதாந்தகுரு அற்புதமாகப் பணித்தருளினது கேளீர். "பரிவாலே கலங்கின அங்கத சரப ஜாம்பவத் ப்ரப்ருதிகளான முதலிகள் சில ஹேத்வாபாஸங்களை ஹேதுக்களாகக் கொண்டு விபீஷண பரிக்ரஹத்தைக் கடுக இசையாதொழிய, தத்வவித்தான திருவடி அவர்கள் சொன்ன ஹேத்வாபாஸங்களை யெல்லாம் ப்ரதி க்ஷேபித்து ஸுபரீக்ஷிதங்களான நிர்தோஷ குணங்களாலே ஸ்ரீ விபீஷணாழ்வான் பரிக்ராஹ்யனென்று விண்ணப்பம் செய்தான். அவ்வளவில் பெருமாள், சரணாகதனை நலியச் சொல்லுவார் திரளிலே இவன் பரிக்ராஹ்யனென்று சொல்லுவாரையும் பெற்றோமேயென்று திருவுள்ளமுகந்து *அத ராம: ப்ரஸந்நாத்மா ச்ருத்வா வாயுஸுதஸ்ய ஹ, ப்ரத்யபாஷத துர்தர்ஷ: ச்ருதவாந் ஆத்மநி ஸ்திதம்* என்கிறபடியே அகம்பநீயமான ஸ்வமதத்தை அருளிச் செய்யத் தொடங்கினார்; விபீஷணன் ஸதோஷனாகையாலே அபரிக்ராஹ்யனென்ற அங்கதாதிமதங்களுக்கும், இவன் நிர்தோஷனாகையாலே பரிக்ராஹ்யன் என்கிற திருவடிமதத்துக்கும் விருத்தமாக ஸதோஷனேயாகிலும் சரணாகதனென்று பேரிட்டு வந்தவன் பரிக்ராஹ்யனென்று தானருளிச்செய்யப் புகுகிறமதம் அவ்வோலக்கத்தில் ஸர்வவிருத்தமாகையாலே இத்தை யெல்லாருங்கூட அநாதரிப்பார்களென்று பார்த்தருளி *மமாபி து விவக்ஷாஸ்தி காசித் ப்ரதி விபீஷணம், ச்ரோதுமிச்சாமி தத் ஸர்வம் பவத்பி: ச்ரேயஸி ஸ்திதை:* என்று, நம்முடைய மதத்தை நாமும் சொல்ல நினையாநின்றோம், அதினுடைய அநுஷ்டானம் பின்பு பார்த்துக்கொள்ளுகிறோம், நமக்குப் பரிவரான நீங்கள் நாம் சொல்லுகிற வாக்யத்தை விபீஷணனுடைய சரணாகதி வாக்யம் பட்டதுபடுத்தி அநாதரியாதே கேட்டுத் தரவேணுமென்று இரந்தருளினார்—ஆக இத்தனையும் வேதாந்தவாசிரியருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகள். மேலேயுமுள்ள பங்க்திகளை ஸ்ரீகோசத்திலே ஸேவித்துக்கொள்வது.

ஸ்ரீ ராமாயணமோதினரெல்லாருமறிந்திருப்பது இரண்டே மதம்; விபீஷணன் துஷ்டனாகையாலே சேர்த்துக்கொள்ளத் தகாதவன் என்கிற (ஸுக்ரீவாதிகளின்) மதமொன்றும், இவன் அதுஷ்டனாகையாலே சேர்த்துக்கொள்ளத்தக்கவன் என்கிற (திருவடியின்) மதமொன்றுமாக இரண்டு மதங்களுக்குமேல் மூன்றாவது மதமொன்று இருப்பதாக யாருமறிந்ததில்லை. பெருமாள் ஸுக்ரீவாதி மதத்தைத் தள்ளி ஹநுமந் மதத்தை யாதரித்து விபீஷணாழ்வானைப் பரிக்ரஹித்தருளினாரென்றும் சொல்லிவருகிறோம். மேலே விவரித்த இரண்டு மதங்களையும் கண்டித்துவிட்டார் பெருமாள் என்று ஸ்வாமி தேசிகர் ஆழ்ந்து அறிந்து அழகாக வெளியிட்டிருப்பது அவருடைய தார்க்கிக ஸிம்ஹத் வத்தை நிலைநாட்டுகின்றது.

தார்க்கிகர்கள் ப்ரதிவாதிகளின் வாதங்களைக் கண்டிக்கும்போது சிலவிடங்களில் ஹேதுவைக் கண்டிப்பர்கள்; சிலவிடங்களில் ஸாத்யத்தைக் கண்டிப்பர்கள்; இந்த ரீதியில் சக்ரவர்த்தி திருமகன் ஸுக்ரீவாதி வாதத்தில் ஸாத்யத்தைக் கண்டித்தார்; மாருதி வாதத்தில் ஹேதுவைக் கண்டித்தார். ஸுக்ரீவாதிகளுக்கு ஸாத்யம் (விபீஷணனுடைய)

அபரிக்ராஹ்யத்வம்; அதை மட்டும் கண்டித்தார். துஷ்டனுகையாலேயென்கிற ஹேது வைக் கண்டிக்கவில்லை. மாருதிக்கு ஸாத்யம் (விபீஷணனுடைய) பரிக்ராஹ்யத்வம்; அதைக் கண்டிக்கவில்லை. அதுஷ்டனுகையாலே என்கிற ஹேதுவை மட்டும் கண்டித்தார்.

| ஸுக்ரீவாதி மதம் : | மாருதி மதம் : | ஸ்ரீராம மதம் : |
|---|---|---|
| விபீஷணன் துஷ்டனுகையாலே கொள்ளத் தகாதவன். | விபீஷணன் அதுஷ்டனுகையாலேகொள்ளத் தக்கவன். | துஷ்டனுகையாலே கொள்ளத் தக்கவன். |

ஆக வெவ்வேறுபட்ட மூன்று மதங்கள் தேறிவிட்டன. தோஷமே பச்சையாக ஸ்வீகரிப் பதைத் தன்னேற்றமாகக் கொண்டவர் பெருமாள் என்று தேறிற்று. இதனால் "செய்தாரேல் நன்று செய்தார்" என்பது வ்யாக்யாதமாயிற்று. "சரணுகதனுகையாலே பரிக் ராஹ்யன்" என்பதே ஸ்ரீராமனுடைய மூன்ருவதான மதம் என்பது அஸங்கதம். அவனுடைய சரணுகதத்வத்தை ஸுக்ரீவாதிகளும் க்ஷேபிக்கவில்லையே—இதி ஸம்க்ஷேப:.



## ஸந்தானகோபாலரின் விஷம ப்ரசாரத்திற்கு ஓர் கல்வெட்டான பதில்.

(சின்னகாஞ்சீபுரம் ஆனைகட்டி வீதி
ஸ்ரீ உ. வே. கீதாரத்னம் நல்லப்பா ஜீயப்பங்கார், B. A.,
ஸ்ரீ யதோக்தகாரி ஸன்னிதி தர்மகர்த்தா)

இருநூறு அல்லது இருநூற்றைம்பது ஆண்டுகட்கு உட்பட்ட நவீன வைஷ்ண வர்கள், ஸ்ரீ சைலேச தயா பாத்திரத்திற்குப் போட்டியாக ராமானுஜதயா பாத்திரத்தைக் கற்பித்து ஸ்ரீ வைஷ்ணவருள் பெரும் பிளவையும், கோர்ட்டுகளில் ஓயாத வியாஜ்ஜியங் களையும் கிளப்பி, தோல்விக்குமேல் தோல்வி, தண்டனைகளுக்குமேல் தண்டனைகள் அடைந்தார்கள். இதன் பலனுக, பண்டித பாமர வாசியின்றி எல்லா வடகலையாருக்குமே, பரமாசார்யரான மணவாளமாமுனிகளிடத்தில் த்வேஷத்தையும், பாமரர்களான சில தென்கலையாருக்கு மஹாசார்யரான ஸ்ரீ தேசிகர் விஷயத்தில் விப்ரதிபத்தியையும் விளை வித்தார்கள்.

ஸ்ரீ தேசிகர் ஆழ்வார்களின் நிழலும் அடிதாறுமாக (பாதரேகையாக) வுள்ள தென்கலைப் பூர்வாசார்யர்களையே அடியொற்றி நிற்பவர்; பிள்ளானுக்குமேற்பட பெரிய வாச்சான் பிள்ளையையே பெரும்பாலும் தழுவி தம்முடைய க்ரந்தங்களை ப்ரஸாதித்தவர்; மணவாளமாமுனிகளும் ஸ்ரீ தேசிகரை "அபியுக்தர்" என்று கொண்டாடியுள்ளார்; இதன் காரணமாகவே ஸ்ரீ தேசிகருக்குத் தென்கலை திவ்ய தேசங்களில் விக்ரஹ ப்ரதிஷ்டை ஏற்பட்டு பூஜா உத்ஸவாதிகளும் நிகழ்ந்து வருகின்றன; என்கிற இவ் வுண்மைகளை ஸ்ரீ காஞ்சி P. B. A. ஸ்வாமி பல வருஷங்களாக, பல க்ரந்தங்களில், பல விதமாக இதரர்கள் வாய்திறக்க முடியாதபடி விளக்கிவந்த போதிலும் இந்த மத த்வேஷம் குறைந்தபாடில்லை. மேன்மேலும் விருத்தியையே யடைகிறது. இந்த நிலையில் சில

ப்ராமாணிக ப்ரமுகர்கள் கூடி இருகலையாருக்கும் பரஸ்பர அன்பை உண்டாக்க முன் வராமலிருப்பது மிகவும் சோசநீயம்.

தவிர, மணவாளமாமுனிகளின்மேலுள்ள த்வேஷம், நாளடைவில் ஸ்ரீ ராமாநுஜரையே தழுவ ஆரம்பித்து விட்டதே! மணவாளமாமுனிகள் ஸ்ரீ ராமானுஜரின் அபராவதாரமாக விருக்கிற காரணத்தினாலோ?—"ஸ்ரீ ராமானுஜ தர்சனம்" என்பதைப் பொருமல் "ஸ்ரீ தேசிக தர்சனம்" என்றே பல வருஷங்களாக ப்ரசாரம் செய்து வருகின்றனர். இப்போது திருமலையில் ப்ராசீனமாகவுள்ள ஸாக்ஷாத் ஸ்ரீ ராமானுஜரின் அர்ச்சா மூர்த்தியை ஸ்ரீ தேசிகராகவே ப்ரசாரம் செய்ய வாரம்பித்துவிட்டனர். இதன் விளைவு என்னுதும் என்பதை அறியகில்லாரே. மணவாளமாமுனிகள் விஷயத்திற்போல் ஸ்ரீ ராமானுஜர் விஷயத்திலும், அவருடைய பெயரைக்கூட கேட்க ஸகியாதபடி, ஸ்திரீபாலர்களுட்பட எல்லா வடகலையாருக்குமே த்வேஷத்தையல்லவோ உண்டுபண்ணித் தீரும். ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி அவ்வப்போது உண்மைகளை, —"வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று தேங்காய் உடைப்பதைப் போலும் P. B. A. ஸ்வாமியின் வியாஸங்கள்" என்று ஸ்ரீ D. R. ஸ்வாமி பல வருஷங்கட்குமுன் எழுதியுள்ளபடி—ஸந்தேஹத்திற்குச் சிறிதும் இடந்தராமல் தெளிவாக விளக்கி வந்திருக்கவும் மேன்மேலும் விதண்டாவாதங்களும் பொய்யான ப்ரசாரங்களுமே வளர்கின்றனவே.

ஸ்ரீ ராமானுஜரின் ஜீவிய காலம் கி. பி. 1017—1137. ஸ்ரீ தேசிகரின் அவதார வருஷம் கி. பி. 1268 என்பது நிஸ்ஸந்தேஹம். ப்ரஸ்துத ஸ்ரீ ராமானுஜரின் விக்ரஹம் எப்போது திருமலையில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது. ஞானமுத்திரைக்குக் காரணம் என்னவென்கிற இக்கேள்விகளுக்கு, 1953ல் திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தின் சார்பில் வெளியிடப்பட்டுள்ள "திருமலை யொழுகு" என்கிற நூலில் (பக்கம் ×VII—×VIIIல்) சரியான பதில் தரப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ராமானுஜரின் அர்ச்சாமூர்த்தி திருமலையில் ஏற்பட்டது கி. பி. 1057ல்! ஞானமுத்திரைக்குப் பல காரணங்கள் கூறப் பட்டிருந்தாலும், அவைகளுள் முக்கியமானது ஸ்ரீராமானுஜர் ஸமர்ப்பித்த திருவாழி திருச்சங்குகளைத் திருவேங்கடமுடையான் அங்கீகரித்ததே. இக்காரணத்தினல்தான் திருப்பதியிலுள்ள ஸ்ரீ கோவிந்தராஜன் ஸந்நிதியிலும், சக்கரவர்த்தி திருமகன் (பெரிய ரகுநாதன்) ஸந்நிதியிலும் கூட ஞானமுத்திரையுடனேயே ஸ்ரீ ராமானுஜர் ஸேவை ஸாதிக்கிருர். திருமலையில் ஸ்ரீ ராமானுஜர் ஸந்நிதி ஏற்பட்டது கி. பி. 1200க்கு பல வருஷங்கள் முன்னதாகவே யிருந்திருக்கவேண்டும் (அதாவது ஸ்ரீ தேசிகரின் அவதாரத்திற்கு 70-80 ஆண்டுகட்கு முன்னதாகவே) என்பதற்குச் சான்றுகளாக இரு கல்வெட்டுகளையும் குறிப்பிட்டு விளக்கம் தரப்பட்டுள்ளது.

(1) "திருபுவன சக்ரவர்த்திகள் வீர நரஸிம்மயாதவராயருக்கு யாண்டு 15ஞ விக்ரம ஸம்வத்ஸரத்து ஆவணி மாஸமுதல் எம்பெருமானர் கோயில் திருவிளக்கும் திருமாலையும் வைஷ்ணவர்கள் தர்மம்." (T.D. Ins. Vol. I No. 89)

(2) "ஆன ஸௌம்ய—
தொருநாள்—
இராமானுஜ—
ன் எம்பெருமான்—"

என்றொரு சிதைந்த கல்வெட்டும், வேறு சில சிதைந்தனவும் இராமானுஜரைப் பற்றிக் குறிப்பிடுகின்றன். இவை கி. பி. 1200க்கு முற்பட்டவையாகவும் இருக்கலாம் எனவே இராமாநுஜர் கோயில் கி. பி. 1200க்கு முன் இருந்ததென்பது பெறப்படும்'' இத்தகைய கல்வெட்டுச் சான்றுகளையும் தென்கலையாரின் துஷ்ப்ரசாரம் என்று சாதிக்க முன் வருவரோ ஸுந்தரனகோபாலர்.

இந்த சந்தர்ப்பத்தில் ஓர் முக்கியமான கேள்வி எழுகிறது. 108 திவ்ய தேசங்களுள் கோயில், திருமலை, பெருமாள்கோயில், திருநாராயணபுரம் என்கிற இந்நான்கும் எல்லா ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குமே வெகு முக்கியமானவை. தினந்தோறும், த்ரிகாலமும் சந்தியாவந்தன முடிவில் அனுஸந்திக்கப் படுமவை. பெருமாள்கோயிலுக்கு (காஞ்சீ புரத்திற்கு) அடுத்துள்ள ஸ்ரீ ராமானுஜரின் அவதாரஸ்தலமாகிய ஸ்ரீபெரும்பூதூரிலும் ஸ்ரீரங்கத்திலும், திருமலையிலும், திருநாராயணபுரத்திலும் உள்ள ஸ்ரீ ராமானுஜரின் திவ்ய மங்கள விக்ரஹங்கள் ஸ்வாமியின் ஜீவிய காலத்திலேயே பக்தர்களின் அவாவினால் ஏறியருளப் பண்ணப்பட்டவை. இவைகளை எல்லா ஸ்ரீ வைஷ்ணவர்களுமே, "தாமுகந்த திருமேனி," "தமருகந்த திருமேனி," "தாமான திருமேனி," "அனந்தாழ்வானுக்கான திருமேனி" என்றென்று கொண்டாடி வருகிறார்கள். இந்த நான்கு திருமேனிகளிலும் உள்ள திருமண்காப்புகள், அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில், நிர்விவாதமாய் எந்த ரீதியாக விருக்கின்றன வென்பதை ப்ராமாணிகர்கள் நோக்கவேண்டும். இவைகளை ஸ்ரீ தேசிகர் ஸேவித்திருக்கமாட்டாரா? ஸ்ரீ தேசிகர் திவ்ய தேசங்களுக்கும், ஆழ்வாராசார் யர்களின் அவதார ஸ்தலங்களுக்கும் எத்தனை தடவை விஜயம் செய்து மங்களாசாஸனம் செய்திருப்பர்? இவ்வெல்லா ஸ்தலங்களிலுமுள்ள திருமண்காப்புகளின் ஸந்நிவேசம் ஒரு ரீதியாக விருக்க மற்றொரு ரீதியான திருமண்காப்பை ஸ்ரீ தேசிகர் நெஞ்சினாலும் நினைக்க ஹேதுவிருந்திருக்குமோ? அப்படி ஒருக்கால் ஸ்ரீ தேசிகரின் திருமண்காப்பு வேறுவிதமாக விருந்திருந்தால், ஒன்றல்ல, பலவல்ல, நூற்றுக் கணக்கிலல்லவோ க்ரந்தங்களை அருளிச் செய்து தாமணிந்திருந்த திருமண்காப்பின் ப்ராமாணிகத்வத்தை ஸ்தாபித்திருப்பரே! (இம்முக்கியமான விஷயத்தில் நிகம பரிமலத்தைப்போல் ஒரு க்ரந்தத்தையும் நவீனர்கள் இதுவரையில் ப்ரஸ்தாவிக்கக்கூடவில்லையே!) ஆகையால் திருமண்காப்பு விஷயத்தி லேயும் ஸ்ரீ தேசிகர், ஸ்ரீமந் நாதமுனிகள், ஆளவந்தார், முக்கியமாக ஸ்ரீ ராமாநுஜர், கூரத்தாழ்வான், பட்டர், நம்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, தம்முடைய காலத்திலேயே யிருந்த பிள்ளைலோகாசார்யர், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் முதலிய பூர்வாசார்யர்கள் வகுப்பையே சேர்ந்தவர் என்று விளங்கவில்லையா?

இதனால் இப்போதுள்ளவர்கள் தாங்கள் அணியும் திருமண்காப்பு ரீதியை மாற்றிக் கொள்ளவேணுமென்று நாம் ப்ரசாரம் செய்வதாக ஒருவரும் கருதக்கூடாது. அவரவர்கள் தம்தம் ஸம்ப்ரதாயப்படி நடந்துகொள்வதைத் தடுக்க நினைப்பதும் தகுதி யற்றது. பழைய உண்மைகளை மாற்றாமல் பரிபாலிக்கவேண்டுமென்பதே நமது அபிப்ராயம். வீணான விஷமச் செயல்களில் ஆலோசனை செல்லலாகாது. ... ❁

# நினைவுக்குவருவன நவிலக்கேளீர்.

## (2)

ஏறக்குறைய ஐம்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு நடந்தவொரு விநோத வார்த்தை. தேவப்பெருமாள் ஸன்னிதியினுள் மணவாளமாமுனிகளுத்ஸவம் நடைபெற்று வருகிறது. ஒன்பதாமுத்ஸவத்தன்றிரவு திருவாய்மொழி ஒன்பதாம்பத்து ஸேவை நடவாநின்றது. ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீமத் வித்வத் ஸார்வபௌம. குன்றபாக்கம் ஸ்வாமி. முதலான பல பெரியார்கள் எழுந்தருளியிருக்கிறார்கள். அருளிச்செயல் ஸேவையோ லோகோத்தரமாக நடவாநின்றது. திருவாய்மொழி ஒன்பதாம்பத்தில் ஒன்பதாந்திருவாய்மொழியில் கடைசி பாசுரம் ஸேவிக்கிறார்கள். அந்தப் பாசுரம் வருமாறு;—

“ அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா அணியிழையாச்சியர்மாலைப்பூசல்*
அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி அணிகுருகூர்ச்சடகோபன்மாறன்*
அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்த ஆயிரத்துள்ளிவைபத்துங்கொண்டு*
அவனியுளலற்றிநின்றுய்மின்தொண்டீர் அச்சொன்னமாலைநண்ணித்தொழுதே.” என்பதாம்.

இதில் முன்னிரண்டடிகளின் முதலில் **அவனை** என்று பதம்; பின்னிரண்டடிகளின் முதலில் **அவனி** என்று பதம். முன்னடி ஸேவித்தவர்களெல்லாரும் க்ரமமாக **அவனை**யென்றே ஸேவித்தார்கள். பின்னடி ஸேவிப்பவர்களில் சிலர் மூன்றுமடியிலும் அவனையென்றுதான் பதமென்று நினைத்து “அவனையுண்டுமிழ்ந்தவன் மேலுரைத்த” என்று ஸேவித்தார்கள். பெரிய கோஷ்டிகளில் சுத்தமாக ஸேவிப்பவர்கள் பத்தெட்டு திருநாமங்களாய் அசுத்தமாக ஸேவிப்பவர்கள் இருவர் மூவராயிருந்தாலும் அசுத்தமான ஸேவைதான் ஓங்கி நிற்குமென்பது எங்குங் காண்பதாகும். ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியின் பின்னுலிருந்து கொண்டு ஸேவித்தவொருவர் ‘அவனையுண்டுமிழ்ந்தவன் மேலுரைத்த’ என்று கத்தினுர் போலும். அதை அந்த ஸ்வாமி தவிர வேறு யாரும் கணிசித்ததாகத் தெரியவில்லை. சாத்துமுறை முடிந்து ஸ்வாமிகள் கீழே வீற்றிருந்த பிறகு குன்றபாக்கம் ஸ்வாமி ஜீயர் ஸ்வாமியிடத்திலே ஸாதித்தருளுகிறுர்—எல்லாவற்றையும் உண்டு உமிழ்கிறவன் அவனெருவனேயென்று நினைத்திருந்தோம்; அவனையும் உண்டு உமிழ்கிறவன் வேறெருவன் இருக்கிறுன் போலும் என்று.

ஜீயர் ஸ்வாமிக்கும் மற்றுள்ள பெரியார்களுக்கும் இது விளங்கவில்லை. ‘அவனையுண்டுமிழ்ந்தவன்’ என்று ஸேவித்தது அவர்களுக்குத் தெரியாமையாலே ஸ்வாமி ஸாதித்த வார்த்தையின் சுவையை ஒருவரும் அறிந்துகொள்ள முடியவில்லை. என்ன என்ன? ஸூத்ரம்போல் ஸாதிக்கிறதே, எங்களுக்கொன்றும் புரியவில்லையே! என்கிறுர்கள் ஜீயர் ஸ்வாமி ப்ரப்ருதிகள். ஸ்ரீ ஸ்வாமி அந்த வார்த்தையையே மீண்டு மீண்டும் ஸாதிக்கிறுர். தவறுதலாக ஸேவித்தவர்க்கு விஷயம் புரிந்துவிட்டது. அவர் உடனேயெழுந்து, சப்தஜ்ஞானமும் அர்த்தஜ்ஞானமுமில்லாதவடியேன் பலகாலமாய் இப்படியே ஸேவித்துப் பாவியானேன். இதுவரையில் ஒருவரும் திருத்திக் கொடுத்தவர்களுமில்லை. ஸ்வாமி போல்வார் திருத்திக்கொடுத்தாலும் துர்வாஸநாபலத்தாலே பழைய அபத்தந்தான் தொடருகிறது. இத்யாதிகளை ஸவிநயமாக விண்ணப்பம் செய்தார். கடைசியாக ஜீயர்

ஸ்வாமி ஸாதித்தருளின வார்த்தை—"இப்படியெல்லாம் நேருமென்று முன்னுடியே ஆழ்வார்க்குத் தெரியும் போலும்; அதனுல்தான் *எங்ஙனே சொல்லிலுமின்பம் பயக்குமே* என்று இதையும் ஒரு பலச்ருதியாக அருளிச்செய்து வைத்தார்" என்று.

— ஸ்ரீ காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள் விஷயம். —

(2) அடுத்தபடி தெரிவிக்க நினைக்கும் நிகழ்ச்சி ஏறக்குறைய பத்து வருடங்கட்கு உட்பட்டது. உலகப்பிரசித்தர்களாக விளங்கும் காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ப்ரஹ்மஸ்ரீ சங்கராசாரியார் சுவாமிகள் சின்ன காஞ்சீபுரத்திலேயே நமது தெருக் கோடியிலேயே விஜயம் செய்திருந்த நாளில் ஒரு கார்த்திகை மாதத்தில் ஒரு நாள் மாலை ஐந்து மணிக்கு நாம் நம்முடைய வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையிலிருந்து உபாத்யாயர்களோடும் வித்யார்த்திகளோடும் வெளிவரத் தொடங்கின ஸமயத்தில் (மேலே சொன்ன) பெரியவாளிடமிருந்து அந்தரங்கர்களான இருவர் வந்து "பெரிய வாளனுப்பவந்திருக்கிறோம்; ஸந்தேசமொன்று; நிவேதனம் செய்ய அவகாசமளிக்க வேணு"மென்றுர்கள். "பரம பாக்யம், அவசியம் சொல்லவேணும்" என்றேன். அவர்கள் சொன்னது—கொஞ்ச காலமாக ஆங்காங்கு திருப்பாவை திருவெம்பாவை மகாநாடுகள் பெரியவாளுடைய கட்டளையின்மேல் நடந்து வருகின்றனவல்லவா? இந்த வருஷம் இவ்வூரிலேயே உங்கள் தலைமையில் நடத்தவேணுமென்று பெரியவாளுக்காசை; மார்கழி பிறந்தால் நீங்கள் மதராஸ் போய்விடுவீர்களல்லவா? ஆகவே கார்த்திகை மாதத்திலேயே மகாநாடு நடக்க ஏற்பாடு செய்ய உத்தேசமாம்; உங்களுக்கு ஸௌகரியமானவொரு தேதியைத் தெரிந்துகொண்டு வரும்படி யாக ஆஜ்ஞை; இப்போதே தெரிவிக்க முடியாவிட்டாலும் நாளை காலை மறுபடியும் வருகிறோம்" என்றுர்கள்.

'இதைப்பற்றிச் சிறிது விரிவாகப் பேசவேண்டியிருக்கிறது, உட்காருங்கள்' என்று சொல்லி எல்லோருமாக உட்கார்ந்தோம். அப்போது நாம் சொன்னதாவது— பெரியவாள் செய்துவருகிற பல நூறு நல்ல காரியங்களில் இது ஒன்று மட்டும் இல்லாமலிருக்கலாம். அவாளுக்கு இந்த ப்ரவ்ருத்தி எதற்காகவுண்டாயிற்றென்று தெரியவில்லை. திருப்பாவைக்கும் திருவெம்பாவைக்கும் என்ன ஸம்பந்தம். அதையும் இதையும் ஒன்று சேர்த்துப் பிணைத்து மகாநாடு நடத்துவதில் என்ன லாபம் விளையுமென்று பெரியவாள் நினைக்கிருளென்பது தெரியவேணும். திருவெம்பாவையைப்பற்றி ஒரு வைஷ்ணவரும் குறைவாய் நினைப்பதாக இதுகாறும் எனக்குத் தெரியவரவில்லை. திருப்பாவையில் நாராயணனைத்தவிர வேறொரு தெய்வத்தைப்பற்றினபேச்சே கிடையாது. திருவெம்பாவையில் நாராயணனைத் தாழ்த்திப் பேசியிருப்பதாகப் பிரசித்தமாயுள்ளது. இதெல்லாம் எப்படியாவது இருக்கட்டும். முக்கியமாகச் சிலவிஷயங்கள் சொல்லுகிறேன், பெரியவாளிடம் சென்று ஒன்று விடாமல் விஜ்ஞாபனம் செய்யுங்கள். (என்று ஆரம்பித்தபோது பாடசாலை மானேஜரான ஸ்ரீஉவே. தி. வி. சிங்கராசாரியர் அங்கிருந்தவர் "இந்த மகாநாட்டில் அந்வயிக்க எனக்கு ஸௌகரியமில்லையென்று ஒரே வார்த்தையாகச் சொல்லியனுப்பிவிடலாமே; விரிவு எதற்கு?" என்று ஸம்ஸ்க்ருதபாஷையில் எனக்கு உபாம்சுவாகத் தெரிவித்தார். விவக்ஷிதங்களை ப்ராப்தேஸமயே வெளியிடாமல் அடக்கி வைத்துக்கொள்ள என்னுலாகாது என்று சொல்லிவிட்டு, பெரியவாளிடம் விஜ்ஞாபிக்க வேணுமென்றதைச் சொல்லத் தொடங்கினேன்.

ஸர்வஜ்ஞரான பெரியவாளுக்குத் திருப்பாவை திருவெம்பாவைகளின் பரிஸ்திதி தெரியாமலில்லை. ஆயினும் (ஸ்மாரயே) என்கிற கணக்கில் நினைப்பூட்டுகிறேன். ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் (உவே.) என்று ஒரு சிறப்புப் பெயரை ஒவ்வொருவரும் வைத்துக்கொண்டிருக்கிறோம். 'உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்ய' என்பதன் ஸம்க்ஷேபம் அது. நாங்கள் ஸம்ஸ்க்ருத வேதத்தோடு நிற்காமல் த்ராவிட வேதத்தையும் ஒரு கண்ணாகக் கொண்டிருக்கிறோம். அதிலும் ஸம்ஸ்க்ருத வேதத்தை இடது கண்ணாகவும் த்ராவிட வேதத்தை வலது கண்ணாகவும் கொண்டிருக்கிறோம். எங்களுடைய ஆசார்ய பரம்பரையில் தலைவரானவர் நாதமுனிகளென்பவர். அவர் படாதபாடுகளும் பட்டு, என்றைக்கோ பரமபதம் சேர்ந்திருந்த நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரித்து அவ்வாழ்வார் முகமாக நாலாயிர திவ்யப்ரபந்தங்களைப் பெற்றாரென்று தென்கலையார் வடகலையார் என்கிற வாசியில்லாமல் எல்லோரும் எழுதிவைத்திருக்கிறோம், பரம்பரையாகச் சொல்லியும் வருகிறோம். அந்த நாதமுனிகள் ப்ராஹ்மணோத்தமர்; வடமொழி வேதக் கடல் கடைந்தவர். அவர் தாம் பெற்ற திவ்யப்பிரபந்தங்களைத் தம்முடைய சிஷ்ய ப்ரசிஷ்யபரம்பரயா ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானத்தில் இன்றளவும் ஸூர்யசந்திரர்களுள்ள ளவும் பரவிச் செல்லும்படி செய்து வைத்திருக்கிறார்.

அந்த நாதமுனிகளுக்கு அடுத்தபடி ஆசார்ய பீடத்தை யலங்கரித்தவரும் அவருடைய திருப்பேரனாருமான (ஸ்ரீயாமுனாசார்யரென்கிற) ஆளவந்தார் தமது பிதாமஹரான நாதமுனிகளைக்காட்டிலும் பிரபல பண்டிதர். இளம் பிராயத்திலேயே சோழராஜ ஸபையிற்சென்று "மீமாம்ஸாசாஸ்த்ரயுக்மச்ரமவிமலமநா: ம்ருக்யதாம் மாத்ருசோங்ய;" என்று அறைகூவினவர். அன்னவரும் த்ராவிடவேதத்திலேயே போது போக்கினவர். ஸ்ரீராமாநுஜர், கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர், வேதாந்த தேசிகர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாளமாமுனிகள்—என்று ப்ரஸித்தர்களான ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் ஒருவர்தப்பாமல் எல்லாரும் திவ்யப்ரபந்தங்களைக்கொண்டு காலக்ஷேபம் செய்வதை முக்கியமான விரதமாகக் கொண்டிருந்தவர்கள்.

இவர்கள் இன்று நேற்றைய ஆசாரியர்களல்லர்; அப்ராம்மணர்களல்லர்; ஸம்ஸ்க்குருதவேதவிமுகர்களல்லர். திவ்யப்ரபந்தங்களில் வேதார்த்தங்கள் விசேஷமாகப் பரிமளிக்கின்றனவென்றுகொண்டே இதை நிதியாகப் பரிக்ரஹித்தார்கள். விஷ்ணுவாலயச் சிறப்புகளுக்கு திவ்யப்ரபந்தங்களையே மூலகாரணமாக வைத்து, இன்ன உத்ஸவங்களில் இன்ன திவ்யப்பிரபந்தங்களை ஸேவிக்கவேண்டுமென்கிற நிபந்தனைகளையும் ஏற்படுத்தி, ஒருவருடைய புத்திக்கும் நெஞ்சுக்கும் எட்டாத பெருமைவாய்ந்த திருவத்யயனோத்ஸவ மென்று உலகப்பிரசித்தமான பகற்பத்து இராப்பத்து இயற்சாத்து என்கிற உத்ஸ வங்களையும் ஏற்படுத்தி, இதற்கு அந்த்யயன காலநியமத்தையும் கட்டளையிட்டு வைத்திருக்கிற சீரும் சிறப்புகளும் திவ்யதேசங்கள் மலிந்த தென்னாட்டில் யாருக்குத் தெரியாமலிருக்கிறது. பக்ஷபாதமற்ற கம்பர்பெருமானும் சடகோபரந்தாதியில் "அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த வரும்பொருளைச், செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும், தந்தம் விழாவுமழகுமென்னாம்? ........"என்கிற ஒரு பாடலினால் திவ்யப்பிரபந்தப்

பெருமையைப் பேசிவைத்தார்; இச்செய்யுளின் கருத்தாவது, நம்மாழ்வார் வேதப்பொருள் களைத் திவ்வியப்பிரபந்தமாக அமைத்திராமற்போனால் தேவாலயங்களின் உத்ஸவ அழகும் வைணவ அந்தணர்களின் வீறும் தெரியுமே! என்பதாம்.

இதெல்லாம் ஒருபுறமிருக்க; ஸ்ரீ ராமாநுஜர் காலத்திலிருந்து திவ்யப் பிரபந்தங் களுக்கு வியாக்கியானங்களைப் பரமவைதிகர்களான பேராசிரியர்கள் எழுதிவைத்திருப் பதும், அதைப் பலபல நியமங்களுடன் கேட்டுணர்வதென்கிற பத்ததி எங்கும் ஒரு சிறப் பான முறையில் இற்றைக்கும் வந்துகொண்டிருப்பதும் எந்த மதத்திலுமில்லாத ஓர் ஆச்சரியமல்லவா? திவ்வியப் பிரபந்தங்களின் பொருள்களைப் பிரவசனம் செய்துவந்தார்க ளென்பதேயன்றோ ஸ்ரீ வைஷ்ணவத் தலைவர்களுக்கு ஏற்றமாகச் சொல்லப்பட்டு வருகிறது. பொதுவாகத் திவ்யப் பிரபந்தங்களின் பெருமை ஒருபுறம் நிற்க. பிரகிருதம் திருப்பாவையைப்பற்றித் தனிப்படச் சொல்லுகிறேன் கேளுங்கள். நாலாயிரப் பிரபந்தங் களும் ஒரு தட்டாய், திருப்பாவைமட்டும் ஒரு தட்டாய் எங்கள் முன்னோர்களால் குலாவப்பட்டுள்ளது. திருவாய்மொழி முதலிய மற்றைப் பிரபந்தங்களுக்கெல்லாம் ஒவ்வொரு ஸமய விசேஷத்தில்தான் ஏற்றம். திருப்பாவைக்கு அப்படியல்ல; மார்கழி மாதத்தில் விசேஷ ஏற்றம் என்பதிருக்கட்டும். தினப்படியாகவே வைணவர்களின் கிருஹங்களிலும் மடங்களிலும் ஆலயங்களிலும் திருப்பாவை சேவியாமல் பூஜை நடை பெறாது. எந்தத் திருவிழா நடந்தாலும் 'திருப்பாவை சாத்துமுறை' என்பது ஒரு முக்கியமான கெட்டம்.

திருப்பாவையின் பெருமையைப்பற்றிப் பல நூற்றாண்டுகட்குமுன்பு தோன்றிய ஒரு வெண்பா—"பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும், வேதமனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ், ஐயைந்துமைந்துமறியாத மானிடரை, வையஞ்சுமப்பதும் வம்பு" என்பதாம். திருப்பாவை தெரியாதவரிடமிருந்து தண்ணீர் வாங்கிக் குடிப்பதும் செய்யார் வைணவப் பெரியார். உலகுக்கே உயிராக விளங்கின ஸ்ரீ ராமாநுஜர் "திருப்பாவை ஜீயர்" என்றே போற்றப்பட்டுவந்தார். திருப்பாவைக்கு அவதரித்துள்ள வியாக்கியானங் களும் அனேகம். இவ்வாறாகத் திருப்பாவையின் பெருமை சொல்லச் சொல்ல வளரும்.

இனி திருவெம்பாவையை யெடுத்துக்கொள்வோம்; இதை அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் ஒரு பிராமணரும் பரிக்ரஹித்தது கிடையாது. சைவர்களான பிராமணர்களோ அத்வைதிகளான பிராமணர்களோ யாரும் இதை நெஞ்சாலும் எண்ணினதில்லை. எண்ணப்போகிறதுமில்லை. சிவன் கோவிலொன்றிலும் இதற்குப் பிரசாரமும் கிடையாது. ஓதுவார் என்று சிலர் இருப்பதாகவும், அவர்கள் கையில் புத்தகங்கொண்டு சில கோவில்களில் படித்துவிட்டுப் போவதாகவும், திருவிழாக்கள் நடந்தால் தேவாரப் பாட்டுக்களைச் சொல்லிப் பின்னால் பஜனை செய்து போவதாகவும் சமீபகால நிகழ்ச்சிகளைக் கேட்டு வருகிறோம். அந்தப் பாடல்களுக்கும் பிராமணர் களுக்கும் ஒருவிதமான சம்பந்தமுமில்லையென்பதை மறுக்கக்கூடியவர்கள் எவருமில்லை யென்பது திண்ணம். பெரியவாள் தங்களுடைய மடத்தில் நாங்கள் சிலர் வந்து திருப்பாவை யோதினால் இதை எப்படி சகிக்கமாட்டார்களோ, அப்படியே திருவெம் பாவை யோதுவார் சிலர் வந்து அதை யோதினாலும் சகிக்கமாட்டார்களென்பதில்

சந்தேகமில்லை. ஆக இரண்டு ப்ரபந்தங்களிலும் பெரியவாளுக்கு விருப்பமின்மை யொத்திருக்க, இவ்விரண்டையும் சேர்த்து மகாநாடு நடத்தவேணுமென்னும் முயற்சி மிகவும் அவசியமற்றதென்று நான் விநயத்தோடு விஜ்ஞாபனம் செய்வதாக நமஸ்கார பூர்வகமாய்ச் சொல்லுங்கள்—என்று சொல்லி முடித்தேன். அப்படியே சொல்லுகிறோ மென்று சொல்லி விடைபெற்றுப் போய்விட்டார்களிருவரும்.

அவர்கள் பெரியவாளிடஞ் சென்று இவ்வளவையும் அநுவாதம் செய்திருக்க மாட்டார்களெனினும் ஸாரமாகச் சில சொல்லியேயிருப்பர்கள். பிறகு இதைப்பற்றி ஒரு ப்ரஸ்தாவமும் நேர்ந்ததில்லை. அதன்பின் அனேக ஸமயங்களில் பெரியவாளும் நாமும் ஸந்தித்திருந்துங்கூட இதைப்பற்றின சர்ச்சை ஏற்படவேயில்லை. திருப்பாவையில் "தீக்குறளை சென்றோதோம்" என்றதைப்பற்றிக் களேபரமுண்டாகி நாமெழுதியிருந்ததும் உலகம் பரவியதே. அதன் பின்னரும் பெரியவாளைச் சந்திக்க நேர்ந்ததுண்டு; அப்போதும் திருப்பாவையைப்பற்றின சர்ச்சை நிகழ்ந்ததில்லை. பெரியவாள் பெரும்பாலும் யாத்திரை யில் இருந்துவருவதால் அதிகமாக நெருங்கிச் சந்திக்க வாய்ப்புமில்லை.

இன்று 30—9—67ல் பெரியவாள் ஸன்னிதானத்திற்கு (Camp Masulipatnam) விநயபூர்வகமாக ஒரு விஜ்ஞாபனம் போஸ்டு மூலமாக அனுப்பிக் கொண்டேன். அதற்குச் சரியான காபி இது காண்மின்;—

"அஸ்மத்குருபரம்பராப்யோ நம:."

ஸகல லோகமாந்யர்களாய் வேதவேதாந்த ப்ரவசன ப்ரதிஷ்டாபந நிஷ்ணாதர்களாய் விளங்கும் ஸத்குரு பெரியவாள் ஸன்னிதானத்தில் தாஸாநுதாஸனுன ஸ்ரீ காஞ்சி. ப்ரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசார்யனுடைய ப்ரணாமபூர்வக விஜ்ஞாபனம். ஸன்னிதா னத்தின் க்ருபாகடாக்ஷ விசேஷத்தினுல் ஸர்வவிதம் குசலம் ஸம்ருத்தம். அவ்விடத்து ஜைத்ரயாத்ரா விசேஷங்களுக்கு எப்போதும்போல் ஸ்ரீமுகாநுக்ரஹம் ப்ரார்த்திக்கப் படுகிறது. மஹா ஸன்னிதானத்தில் லோக க்ஷேமத்திற்காக ஒரு யாசனை செய்கிறேன். *யாச்ஞா மோகா வரம்அதிகுணே நாதமே லப்தகாமா* [மேகஸந்தேசே] என்கிற காலிதாஸ மஹாகவியின் வாக்கை நெஞ்சிற்கொண்டே இந்த யாசனையைச் செய்கிறேன். ஏறக்குறைய பத்தெட்டு வருடங்களுக்குமுன் மஹா ஸன்னிதானத்திலிருந்து எனக்குக் கிடைக்கச்செய்த ஸந்தேசமும் அதற்கு என்னுடைய விடை விஜ்ஞாபனமும் அந்தரங் கத்தில் நினைவிருக்கும். அதாவது திருப்பாவை திருவெம்பாவை மகாநாடு விஷயமானது. அப்போது நான் தெரிவித்த விடையை உலகமறியவேணுமென்றே எனது ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகையில் இப்போது அச்சிட்டு வெளியிட நேர்ந்தது. இப்போது மஹா ஸன்னிதானத் திற்கு எழுதிக்கொள்ளும் இந்த விஜ்ஞாபனத்தையும் அதனோடுகூடவே வெளியிடுகிறேன்.

ப்ரதி வருஷமும் பெரியவாள் கட்டளையினுல் நடந்துவருவது பாவை மகாநாடு அன்று, பாவ மகாநாடுதான் என்று பல விவேகிகள் சொல்லிவருவதும் எழுதிவருவதும் பெரியவாள் அறியாததன்று. உண்மையில், பரமபவித்திரமான திருப்பாவையையும் மற்றொன்றையும் சேர்த்துக் கோலாஹலங்கள் செய்விப்பது நாட்டில் மாபாவமே யென்பதில் ஐயமில்லை. ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹம் முழுவதும் இதை மஹத்தான ஹிம்ஸை யாக நினைத்துக் கதறும்போது அஹிம்ஸா விரதத்தில் தலைநின்றிருக்கும் பெரியவாள் இதைக் கட்டாயப்படுத்திச் செய்வதில் என்ன சிறப்புளதோ? இதை ஹிம்ஸையாக

நினைப்பதில் ஔசித்யம் எனக்குத் தெரியவரவில்லையேயென்று பெரியவாள் நினைக்கவும் சொல்லவும் தகாது. திருப்பாவையின் பெருமையையும், மற்றுமுள்ள திவ்யப் பிரபந்தங்களின் பெருமையையும் பெரியவாளுடைய அந்தரங்கம் உணராமலில்லை. முக்கியமாக ஒன்று விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீரங்கம், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர் முதலான திருப்பதிகளில் திவ்யப் பிரபந்தங்களை ஸேவிப்பதற்கென்றே அரையர்கள் என்கிற ஒரு குடும்பம் நாதமுனிகளென்கிற ஸ்ரீ வைஷ்ணவ ப்ரதமாசார்யரால் ஏற்படுத்தப்பட்டு, இக்குடும்பத்தார் நாளைக்கும் ஆச்சரியமான முறையில் திவ்யப்ரபந்த கைங்கரியத்தைச் செய்துவருவதும், அதற்காக அவர்கள் அற்புதமான மரியாதைகளை யநுபவித்துவருவதும் பெரியவாள் கேளாததன்று—காணாததன்று. இத்தகைய சிறப்புகளில் ஏகதேசமும் தேவாரப் பாடல்களுக்கோ திருவெம்பாவைக்கோ இல்லையேயென்கிற வருத்தம் பெரியவாளுக்கு உண்டாகியிருக்கலாம். உண்டாகியிருக்கிறது. இதைப் பரிஹரித்துக் கொள்ளவா பாவமாநாடு நடத்துவது? நினைத்தது நடத்தவல்ல சக்திவாய்ந்த பெரியவாள் ஒன்று செய்யலாம்: ஸ்மார்த்த ப்ராஹ்மண க்ருஹங்களிலெல்லாம் திருவெம்பாவை சொல்லவேண்டியதென்றும், தேவாரப்பாடல்களை ப்ராம்மணர்களெல்லாரும் கற்றுக் கண்டபாடமாக்கிப் பரீக்ஷை கொடுத்துப் பரிசுபெறவேண்டியதென்றும், சிவாலயங்களில் தினப்படி காலைமாலை பூஜைவேளைகளிலும் வீதித் திருவிழாக்களிலும் பலர் கூடித் தேவாரப்பாட்டுக்களை நியமங்களோடு ஓதவேண்டியதென்றும் கட்டளையிட்டு இவ்வாசையைத் தீர்த்துக்கொள்வது நன்று. முதலில் பெரியவாளுடைய மடங்களிலெல்லாம் தேவாரமும் வெம்பாவையும் வைதிகச் சடங்குகளில் ஓதப்படவேண்டும்.

பாவ மாநாடுகள் நடத்தியே பார்க்கவேணுமென்று பெரியவாளுக்கு ஆசையிருந்தால் "சங்கரபாஷ்ய ஸ்ரீ பாஷ்ய மகாநாடு" என்று நடத்த ஏற்பாடுகள் செய்வது நலம். இரண்டு க்ரந்தங்களும் வைதிகமானவை; அந்த மகாநாடுகளில் வைதிகர்கள் கலந்து கொண்டு மிக்க பயனடையலாம். பாணிநி மஹர்ஷி "ச்வ யுவ மகோநாம் அதத்திதே" என்றொரு வியாகரண ஸூத்ரமியற்றி ச்வாவையும் யுவாவையும் (மகவா என்கிற) இந்திரனையும் ஒன்றுசேர்த்து வைத்தார். அதற்காக அவரை உலகம் பழிக்கவில்லை; பாவ மாநாடென்று நடத்திவருகிற இந்த சேராச்சேர்த்திக்கு வைணவவுலகமெல்லாம் வருந்துவதைப் பெரியவாள் அறிந்துவைத்தும் வீண் பிடிவாதம் கொள்வது தகுமா? இதில் எனக்கொரு ஸம்பந்தமுமில்லையேயென்று சொல்லிப் பழி கழிக்கப் பார்ப்பது பெரியவாளுக்கு உற்றதன்று. மனச்சாட்சியை மீறலாகாது.

எங்களுடைய ஆண்டாள் திருப்பாவைக்கு அடுத்த திவ்வியப் பிரபந்தத்தில் "இன்றுமுன்தனக்கு எங்கள்மேல் இரக்கமெழாதது எம்பாவமே" என்றொரு பாடல் பாடியிருப்பதுபோல நாங்களும் பெரியவாளை நோக்கிப் பாடுகிறோம். இந்த அநீதிச் செயலை—அடாதசெயலை—அதர்க்கணச்செயலை—அருந்துதமானசெயலை—அருவருக்கத்தக்கசெயலை—லோக க்ஷேமத்திற்கு ஏலாத செயலைப் பெரியவாள் வைணவவுலகத்தின்மீது கருணை காட்டியோ, நெடுநாளைய அன்பனுன என்னொருவனிடத்துக் கருணை காட்டியோ நிறுத்தும்படி கட்டளையிடுவார்களென்றே நம்பிக்கைகொண்டு இந்த விஜ்ஞாபனத்தை முடிக்கிறேன்.

இங்ஙனம், பெரியவாளிடத்தில் தேவதாவிச்வாஸங்கொண்டிருக்கிற
P. B. அண்ணங்கராசார்யர். (காஞ்சீபுரம்.)

ஸ்ரீ:

# ஒரு அறிவிப்பு

ஸ்ரீ உ.வே. A. K. சடகோபாசாரியர், B.A.,
(Retired Deputy Secretary to the Govt. of Bombay & Secretary, Board of Transport, C.S.D.)

"ஸ்ரீ ராமாநுஜன்" பத்திரிகையை மாதந்தோறும் வாசித்து இன்புறும் வாசகர்களுக்கும், நம் ஸ்ரீ P. B. A. ஸ்வாமியின் உபந்யாஸங்களைச் சென்னையிலும் மற்றும் அநேக திவ்யதேசங்களிலும் கேட்டு மகிழும் பாக்யசாலிகளான பாகவதர்களுக்கும்—ஒரு அறிவிப்பு. விண்ணப்பம் என்னுமல் அறிவிப்பு என்று எழுதுவதின் தாத்பர்யம் இதனுடைய முக்யதையைக் குறிப்பதற்காகவே.

நம் ஸ்வாமியின் அதிமானுஷ்ய க்ருத்யங்களும், நடந்த 60—65 வருஷங்களாக ஸ்ரீ வைஷ்ணவ உலகுக்கு ஸ்வாமி செய்திருக்கும், செய்துகொண்டிருக்கும் ஸகலவிதமான உபகாரங்களும் எல்லாருக்கும் க்ருதஜ்ஞதா விஷயத்தோடு ஒரு பெருமிதமும்கூட. பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர், மணவாளமாமுனிகள் காலங்களில் நாமும் பிறந்திருந்து அவ்வப்போது நடந்த விபவங்களை நாமும் கூடவிருந்து அனுபவிக்கக் கொடுத்துவைக்கவில்லையே என்ற ஒரு மனக்குறை அனேகருக்கு இருக்கலாம். ஆனல் அதே மனக்குறைக்குப் பதிலாக, அந்த பூர்வாசார்யர்கள் இப்பொழுது எழுந்தருளியிருந்து நம் ஸ்வாமியோடு அளவளாவி அனுபவிக்கக் கொடுத்துவைக்கவில்லையே என்றும் அப்படி ஒரு திவ்யமான விலக்ஷண சேர்க்கையை அனுபவிக்க நாமும் கொடுத்துவைக்கவில்லையேயென்கிற ஒரு விசித்திரமான மானஸ அதிருப்தியும் ஏற்படுகிறது. இவையெல்லாவற்றிற்கும் அடிப்படை. நம் ஸ்வாமி நமக்கு அளித்துவரும் ஆத்மானந்த விருந்துகள் இவைகளில் ஒரு அம்சம். காஞ்சீபுரத்தில் நம் ஸ்வாமியால் ப்ரதிஷ்டிக்கப்பட்ட நம்பிள்ளை ஸந்நிதியில் ஸ்வாமி நடத்திவரும் பகவத் விஷய காலக்ஷேபம். அது 1945ளுல் தொடங்கப்பட்டு தற்போது சாத்துமுறையாகும் தருவாயில் இருக்கிறது. இன்னும் 40 பாசுரங்களே சேஷித்திருக்கின்றன.

சென்னை வாஸிகள் நினைக்கலாம்—நம் ஸ்வாமியின் உபந்யாஸங்களை அநேகர் கேட்டிருக்கிறோம். அப்படி கேட்காத விஷயங்கள் நம்பிள்ளை ஸந்நிதி காலக்ஷேபத்தில் என்ன இருக்கப்போகிறது என்று. சென்னையில் நடந்த பகவத் விஷயம், திருப்பாவை, ரஹஸ்யக்ரந்தங்கள் பற்றிய நம் ஸ்வாமியின் உபந்யாஸங்களை அடியேன் அநேகம் கேட்டிருக்கிறேன். மற்றும் ஸ்ரீரங்கம் முதலிய திவ்யதேசங்களில் உத்ஸவாதிகளில் ஸ்வாமி நடத்திவரும் உபந்யாஸங்களையும் கேட்டிருக்கிறேன்; நம்பிள்ளை ஸந்நிதி பகவத் விஷய காலக்ஷேபத்தில் அதிகமாக அந்வயித்திருக்கிறேன். இந்த காலக்ஷேபத்துக்கும் மற்ற நம் ஸ்வாமியின் உபந்யாஸங்களுக்கும் உள்ள தாரதம்யம் மஹீஸார க்ஷேத்திரத்திற்கும் மற்ற பூமி முழுவதுக்கும் உள்ளதாய் புராணகதமாகச் சொல்லப்பட்ட வ்யாவ்ருத்தியேபோலும்!

நம்பிள்ளை ஸந்நிதியில் நடக்கும் பகவத் விஷய காலக்ஷேபத்தின் பந்தாவே ஒரு அதிவிலக்ஷணமானது. காலை 7 மணிக்குச் சரியாக ஸ்வாமி எழுந்தருளி, பகவத் விஷய தனியன்கள் ஸேவிக்கப்பட்டுத் தொடங்கி சுமார் 1½ மணி நடக்கும். ஒரு ஸ்வாமி ஈட்டுப் பங்க்தி ஸேவிப்பர். அநேகமாக ஒவ்வொரு பதிகத்துக்கும் அவதாரிகை மாத்திரம் குறைந்தது இரண்டு நாள் காலக்ஷேப கணக்காகும். பிறகு பாட்டுக்குப் பதார்த்தமும் தாத்பர்யமும் விளக்கப்பட்டுப் பிறகு ஈட்டுப் பங்க்தியின் பேரில் காலக்ஷேபம் நடக்கும். ஒரு நாளுக்கு ஒரு பாட்டு முடிவது ஏதோ சில தினங்களில்தான். அவ்வப்போது ப்ரக்ருத விஷயத்துக்கு ப்ரஸக்தமாக ஏற்படுகிற ஆசார்ய ஹ்ருதய பங்க்தி விஷயங்கள் அவச்யம் சாதிக்கப்படும். மற்றும் பலபல ஐதிஹ்யங்களும் மஹநீயர்கள் சம்பாஷணை களும் கொண்ட பலபல விஷயங்கள் ப்ரவாஹமெடுக்கும். மாதிரிக்கு ஒன்று எடுத்துக் காட்டுகிறேன். "அருள் பெறுவாரடியார்" (10—6—1) பாசுரத்தின் ஈற்றடியில் "மருளொழிநீ மடநெஞ்சே" என்பதில் மருள் எத்தகையது எவ்வளவு கனமானது என்று நமது மனதில் பதியவைப்பதற்காக, ஸ்வாமி எடுத்துக்காட்டிய சுமார் 60 வருஷங்களுக்கு முன், ப்ரபல அயோத்தி சிங்கம்மங்கார்க்கும் அவள் புருஷன் ஸ்ரீ யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமிக்கும் அயோத்தி கோயில் விஷயமாக நடந்த ஸம்பாஷணையை அடியேன் நினைத்து நைந்து உள்கரைந்துருகுகின்றேன். இன்னும் விஷயப்ரவாஹத்துக்கு மேல் ஸ்வாமி கண்கள் நின்றும் கண்ணநீர் தாரைதாரையாக ப்ரவஹிக்கும்.

இந்த ஒரு அம்சத்தில் காஞ்சீ வாசிகளுக்குக் கிடைத்த விருந்து சென்னை வாசி களுக்குக் கிடைக்கவில்லையே என்பது ஒரு பெரிய குறையே அடியேனுக்கு. இந்த அறிவிப்புக்குக் குறிக்கோளே இந்த குறையை எடுத்துக்காட்டுவதுதான்.

கொஞ்சகாலமாக நின்றிருக்கிற இந்த (நம்பிள்ளை ஸந்நிதி) காலக்ஷேபத்தை சீக்கிரத்தில் தொடங்கவேண்டுமென்று ஸ்வாமி திருவுள்ளம்பற்றியிருக்கிறார். திருமேனி பாங்கின் ஸ்திதியை அநுசரித்து ஆரம்பிக்கப்படும். பாக்கியிருப்பது 40 பாசுரங் கள்தானே என்று, எல்லாம் இழந்துவிட்டமாதிரி, கைவிடவேண்டிய அவசியமில்லை. மேல்வரும் பாசுரங்களை அனுபவிக்கும்போதே, அடியில் கழிந்த கட்டங்களை ஸிம்ஹாவ லோகன நியாயப்படி எடுத்து விளக்குவர் நம் ஸ்வாமி. அதுவும் சென்னை பக்தபாகவதர் களைக் கண்ட களிப்பாலே ஸ்வாமிக்கு ஒரு புது ஆவேசம் எழும். அடியேனுடைய சுயநலமே இப்படி எழுதத் தூண்டிற்று. ஆகையால் காஞ்சீபுரத்துக்கு எழுந்தருளத் தயாராகவிருங்கள். தவறினால் பின்னிட்டு க்ரமேண பரமபதம்போய் அங்கு, இந்த காலக்ஷேபத்தில் அன்வயித்த ஸ்ரீமான் நல்லப்பா சடகோபாசார்ய ஸ்வாமி (வைகுண்ட வாஸி) போல்வாரைக் கண்டு, இந்த மஹிமையை அவரால் சொல்லக் கேட்டால், "ஐயோ அப்படியானால் திரும்பி பூலோகம்போய்க் கேட்டு வருவோம்" என்னமுடியாதே, "நசபுநராவர்த்ததே" ஆயிற்றே!

இப்படிக்கு, A. K. சடகோபன்,

நம்பிள்ளை ஸந்நிதி பகவத்விஷய காலக்ஷேப சாற்றுமுறைக் கமிட்டித் தலைவன்



எம்பெருமானுர் திருவடிகளே சரணம்.

# கரியமாணிக்கத்தில் அரியமாணிக்கங்கள்.

(P. B. A.)

ஸ்ரீரங்கத்திலிருந்து குணசீலம் செல்லும் வழியில் கரியமாணிக்கமென்னும் விலக்ஷணமான அக்ரஹாரம் விளங்குவது ஸ்ரீ வைஷ்ணவவுலகம் நன்கறிந்ததே. 10—9—67ல் இங்கு நடந்த விசேஷங்களைப்பற்றித் தெரிவிப்பதற்குமுன் இத்தலத்தின் வைலக்ஷண்யத்தைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபிக்கக் குதூஹலமுண்டாகிறது. ஆழ்வாரருளிச் செயல்களில் திவ்யதேச வாஸிகளான ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கொண்டாடிக் கூறும் பாசுரங்கள் பலபல இருந்தாலும், இந்த விஷயத்தில் பெரியாழ்வார் திருமொழியில் திருக்கோட்டியூர்ப் பதிகமொன்றே நிகரற்றதென்று அடியேன் மிக்க இளமையிலேயே கிரஹித்தவன். *நாவகாரியம் சொல்லிலாதவர் நாடொறும் விருந்தோம்புவார், தேவகாரியம் செய்து வேதம் பயின்றுவாழ் திருக்கோட்டியூர்* *குற்றமின்றிக் குணம் பெருக்கிக் குருக்களுக்கனுகூலராய், செற்றமொன்றுமிலாத வண்கையினர்கள்வாழ் திருக்கோட்டியூர்* காசின்வாய்க்கரம் விற்கிலும் கரவாது மாற்றிலிசோறிட்டுத், தேசவார்த்தை படைக்கும் வண்கையினர்கள்வாழ் திருக்கோட்டியூர்* என்றிப்படி ஸ்தலவாஸிகளின் பெருமையை வாயார வாழ்த்திப் பேசின பாசுரங்கள் அருளிச்செயலில் வேறு இருப்பதாக அடியேனுக்குத் தோன்றவில்லை. மேலே குறித்த கரியமாணிக்கத்திற்குச் சிலவாண்டு கட்குமுன் முதன்முதலாகச் சென்றகாலை அங்குள்ள ஸ்வாமிகளின் வைலக்ஷண்யத்தை உற்று நோக்கினபோது மேலேகுறித்த திருக்கோட்டியூர்ப் பாசுரங்களே நினைவுக்கு வந்தன. திருக்கோட்டியூர்க்குப் பெரியாழ்வார் திருவுள்ளம்பற்றிய ஏற்றத்திற்கு முக்கிய மான காரணம் அத்திருப்பதியில் செல்வநம்பியென்கிற மஹான் எழுந்தருளியிருந்ததே யாம். அவரைப் பெரியாழ்வார் தமது இரண்டு திவ்யப் பிரபந்தங்களிலும் சிறப்பித் தருளினர். திருப்பல்லாண்டில் *அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் அபிமானதுங்கன் செல்வன்* என்றுர். அடுத்த திருமொழியில் நாவகாரியப் பதிகத்தில் *நளிர்ந்தசீலன்நயாசலன் அபிமானதுங்கனை நாடொறும் தெளிந்த செல்வனைச் சேவகங் கொண்ட செங்கண்மால்* என்றுர்.

ப்ரக்ருதமான கரியமாணிக்கத் தலத்திலும் அந்தச் செல்வநம்பியை நினைப்பூட்டா நின்றுகொண்டு நித்யவாஸம் செய்யும் மஹான் ஸ்ரீமதுபயவே. வி. வி. ஐயங்கார்ஸ்வாமி யென்று ப்ரஸித்தரான பெரியார். இவர் Bombay மாநகரத்தில் சிறந்த உத்யோக பதவியில் வாழ்ந்து விச்ராந்தி பெற்றுப் பத்து வருடங்களுக்கு மேலாக பகவத்விஷய ரஹஸ்ய இதிஹாஸபுராண ப்ரவசனமே போதுபோக்காக ஸ்வக்ராமத்திலேயே வாழ்ந்துவருகிறுர். *ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே* என்கிற ச்ருதிக்கு ப்ரத்யக்ஷ லக்ஷ்யமாக விளங்குமிந்த ஸ்வாமியின் பெருமைகளைப்பற்றி விஸ்தரிக்கத் தேவையில்லை. ஸ்ரீவசன

# கரியமாணிக்கத்தில் பல ஸந்தர்ப்பக் காட்சிகள்.













பூஷண நிஷ்டாகரிஷ்டரான இந்த ஸ்வாமி இத்தலத்தில் நெடுநாளாகவுள்ள தேவப் பெருமாள் ஸன்னிதியைத் திருப்பணிகள் விசேஷங்களாலும் மற்றும் பரிஷ்காரப்ரணாளி களாலும் பரமவிலக்ஷணமாக்கியிருப்பது பாராட்டத்தக்கது. உள்ளூர் வாஸிகளைச் செயல் நன்ருகத் திருத்திப் பணிகொண்டு தமக்கு உசாத்துணையாக்கிக்கொண்டும் *ஆளுமாளா ரென்கிற இழவுதீர எம்பெருமானுக்கு மங்களாசாஸன பரராக்கியும் போருகின்ற இந்த மஹாஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடுவது முதன்மையான காரியம்.

இந்த வியாஸத்திற்கு மகுடம் "கரியமாணிக்கத்தில் அரியமாணிக்கங்கள்" என்றிட்டிருக்கிறேன். ஒரு மாணிக்கத்தைப்பற்றிக் கீழ் எழுதியாயிற்று. இந்த மாணிக்கம் மற்றும் பல மாணிக்கங்களைத் திரட்டிக் காணக் குதுகலித்து இத்தலத்தெம்பெருமானுக்கு ஸஹஸ்ரகலசாபிஷேக மஹோத்ஸவமொன்று செய்விக்க மனோரதித்து, கடந்த ஆவணிமீ 25உ (10—9—67) ஞாயிற்றுக்கிழமையன்று அதனைச் சீரும் சிறப்பும் பொலிய லோகோத்தரமான முறையில் நடத்திவைத்த அதிசயம் உண்மையில் அபூர்வமான அதிசயமே. அன்று காலை 8 மணிமுதல் பகல் முழுவதும் இரவு முழுவதும் இடையருத அநுபவம். ப்ரஹ்மானந்தப்ரவாஹம்.

திருவெள்ளறை பாஞ்சராத்ர ஆகம நிபுணரான ஸ்ரீமதுபயவே. செந்தாமரைக் கண்ண பட்டர்ஸ்வாமி தலைவராக எழுந்தருளியிருந்து தம்மைச் சேர்ந்த அர்ச்சக ஸ்வாமிகளையுடன்கொண்டு ஸஹஸ்ரகலச திருமஞ்சனத்தை முறைவழுவாது நடப்பித்தார். கோயில், திருவெள்ளறை முதலான திவ்யதேசங்களிலிருந்து ஆசார்ய புருஷர்களும் அத்யாபக வேதபாராயண ஸ்வாமிகளும் வித்வான்களும் 'அக்ரஹாரம் நிறைந்துவிட்டது' என்னும்படியாகத் திரண்டெழுந்தருளியிருந்தது மிக அதிசயிக்கத்தக்கதாகவே யிருந்தது. ஒருபுறம் யஜுர் வேதபாராயணமும், மற்றொருபுறம் ஸாமவேத பாராயணமும், இன்னொரு புறம் அருளிச்செயல் ஸேவையும் *அலையாருங் கடல்போல் முழங்கும்* என்ற ஆழ்வாரருளிச்செயலை நினைப்பூட்டிக்கொண்டேயிருந்தன. நாதஸ்வரகீதமும் நன்கமைந்திருந்தது, ததீயாராதனச் சிறப்பும் கோஷ்டீ ப்ரஸாதபணியார விநியோக வைபவமும்பற்றிச் சொல்லவேணுமோ? பரத்வாஜாச்ரம ப்ரக்ரியையே.

மாலை ஸூர்யாஸ்தமய ஸங்கிர்ஷத்தில் ஸஹஸ்ர கலசாபிஷேக ஸமனந்தரமான ஸஹஸ்ரதாரைத் திருமஞ்சனம் முடிவுபெற, க்ரமேண அலங்காரமும் உபயவேத சாத்துமுறைகளும் கோஷ்டீ விநியோகமும் நடைபெற்றபின்பு எட்டுமணி முதல் பதினொருமணி வரையில் உத்ஸவத்திற்கு ப்ரதானங்கமான உபந்யாஸங்களும் நடைபெற்று, பெருமாள் பெரிய திருவடி மஹோத்ஸவங் கண்டருள ஸன்னுஹமாகிற ஸ்வல்ப இடையவகாசத்தில் ஸ்வாமிகள் சிறிது விச்ராந்தி கொண்டிருக்கலாம்.

இடையில் ஒரு நிகழ்ச்சி இங்கு அவசியம் தெரிவிக்கவேண்டியதாகிறது. ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரான ஸ்ரீமதுபயவே. புத்தூர். அட்வகேட். S. கிருஷ்ண

ஸ்வாமி ஐயங்கார்ஸ்வாமி, முன்னம் ப்ரஸ்தாவித்த ஸ்ரீ வி. வி. ஐயங்கார்ஸ்வாமி திருமாளிகையில் (பகல்) மூன்று மணியிலிருந்து நான்கு மணி வரையில் ஒரு ஸ்ரீ வைஷ்ணவ ஸம்மேளனம் நடத்தினர். உத்ஸவார்த்தமாக அங்கு வந்திருந்த வைதிகலௌகிகப் பெரியார்கள் பலரும் ஸம்மேளனத்தில் அந்வயித்தார்கள். ஆங்காங்கு திருப்பாவை திருவெம்பாவை மகாநாடுகளாலும் தெய்வீகப் பேரவைக் கூட்டங்களாலும் நமது தரிசனத்திற்கு ஏற்பட்டுவரும் சங்கடங்களைப் போக்கிக் கொண்டு திகந்த வ்யாபியான ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையை ஸம்ரக்ஷிப்பதற்கான வழிகள் தேடுவதற்காகவே இந்த ஸம்மேளனம் கூடிற்று. ஆலோசனையின் ஒருவிதமான முடிவு ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகை 238-ல் வெளிவந்துள்ளது உலகம் பரவியே யிருக்கின்றது. இனிக் காணும் நன்மைகளை ஸ்ரீ ராமாநுஜனும் க்ரமேண தெரிவிக்கும். ப்ராஸங்கிகமானவிது நிற்க.



கீழே ப்ரஸ்தாவித்த பெரிய திருவடி மஹோத்ஸவம் 12 மணி முதல் 3, 4 மணி வரையில் உபயவேதபாராயண கோஷ்டிகளுடனும் வாத்யக் கச்சேரிகளுடனும் அக்ரஹார ஸந்நிவேசத்திற்கு அநுகுணமாக நடந்தேறிற்று. சிறியார் பெரியாரென்னும் வாசியற அவ்வூரிலுள்ளாரனைவரும் உள்ளங்கொள்ளாத களிப்புடன் *ஓடுவார் விழுவார் உகந்தாலிப்பார் நாடுவார்* என்கிற பெரியாழ்வார் பாசுரத்தை நினைப்பூட்டா நின்றுகொண்டு ஸம்ப்ரமித்தபடிகள் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றவே. இஃது ஒரு நாளைய நிகழ்ச்சியாயிருந்தாலும் நினைதொறும் சொல்லுந்தொறும் அமுதூற நின்றது.

இத்தகைய அற்புதமானவொரு ஸந்தர்ப்பம் அடியேனுடைய வாழ்நாளில் வேறு எந்த ஸ்தலத்திலும் அநுபவிக்க நேர்ந்ததில்லையென்பது அதிசயோக்தியன்று. இத்தலத்தின் சிறப்புகள் மேன்மேலுமோங்குகவென்று நெஞ்சார வாழ்த்தி நிற்கிறேன். ... ❁

# பாகவதகைங்கர்ய நிஷ்டர் ஸ்ரீ R. வரதராஜய்யங்கார்ஸ்வாமி

[A. ராமாநுஜாசாரி, B.A., புது டில்லி.]

பரதகண்டத்தின் தலைநகரில் உத்தியோக பதவி வகிக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆயிரத்திற்குக் குறைவிலர். அவர்களில் சம்பிரதாய விஷயங்களில் ஆழ்ந்த ஞானம் கொண்ட பெரியார் சிலருளர். அப்பிரமுகர்களில் சமீபகாலத்தில் இங்கு ஏள்ளியிருந்த இருவரை டில்லி ஸ்ரீ வைஷ்ணவர்கள் மறக்கமுடியாது. உலகப்பிரஸித்திபெற்ற விக்ஞானி (வைகுண்டவாஸி) டாக்டர் K. S. கிருஷ்ணன் ஸ்வாமியும், சட்ட உலகத்தில் நட்சத்திர மாய் விளங்கினவராய் இப்போது சென்னையில் ஓய்வெடுத்துக் கொண்டிருப்பவரான ஜஸ்டிஸ் S. வரதாச்சார் ஸ்வாமியுமாவர். இவர்கள் தங்களுடைய கனத்த அலுவல்களுக் கிடையே சம்பிரதாய விஷய க்ரந்த காலக்ஷேபாதிகளைச் செய்தும் செய்வித்தும் போந்த பரம உத்தமர்கள். இவர்களது பங்க்தியில் அடுத்தபடியாக ஸ்ரீ R. வரதராஜய்யங்கார் ஸ்வாமியைக் குறிப்பிடுவது சாலப்பொருந்தும்.

ஸ்ரீ வரதராஜய்யங்கார் ஸ்வாமி Food and Agriculture Ministry-யில் Under Secretary பதவியை வகித்து, சுமார் 30-வருடங்கள் சர்க்கார் சேவைக்குப் பிறகு இம்மாதம் ஓய்வு பெறுகிறார். டில்லி ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபையின் "ஈன்ற முதல் தாயும்..மொய்ம் பால் வளர்த்த இதத்தாயுமாயிருந்தவர்" ஸ்ரீ வரதராஜய்யங்கார் என்றால் மிகையாகாது. ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபை ஆரம்பித்து அடுத்த ஸம்வத்ஸரம் 25 வருடங்கள் பூர்த்தியாகின்றன. இச் சபையின் குறிக்கோள் ராமாநுஜ தர்சனத்தை ஆங்காங்கு பிரசாரம் செய்து, சபையின் சார்பில் எல்லா ஆழ்வார்—ஆசாரியர்களின் திருநட்சத்திரங்கள் கொண்டாடப்படுகிறது. விசேஷமாக உடையவர், ஸ்ரீ நிகமாந்த தேசிகன், ஸ்ரீ மணவாள மாமுனிகள் இம்மூன்று மஹாசார்யர்களின் வருட திருநட்சத்திரங்கள் பத்து நாட்கள் விமரிசையாக நடக்கிறது. அவ்வமயம் வேதபாராயண திவ்யப் பிரபந்த சேவையைத் தவிர, பெரிய வித்வான்களைக் கொண்டு சம்பிரதாய விஷயங்களைப்பற்றிய உபந்யாஸங்களும் நடத்தப்படுகிறது. சில ஆண்டுகளாக இவ்வுத்ஸவங்கள் இங்கு ஸேவைஸாதிக்கும் ஸ்ரீவரதராஜய்யங்கார்



ஸ்வாமி திருமாளிகையிலே நடக்க ப்ராப்தமாயிற்று. இவ்விழாக்களையொட்டி உபந்யாஸம் செய்யவரும் ஸ்வாமிகளுக்கு தங்குமிடமும் ஸ்வாமி திருமாளிகையே. ஆழ்வார்—ஆசாரியர்களுத்ஸவங்களை விமரிசையாக நடத்த இவர் செய்த பணிகளை டில்லி ஸ்ரீ வைஷ்ணவர்கள் என்றென்றும் நன்றியுடன் நினைப்பர். சபை ஸ்ரீ அய்யங்காருக்கு 13—8—67ல் ஒரு பிரிவு உபசாரம் நடத்தியது. அவ்வமயம் ஸ்வாமிக்கு வழங்கப்பட்ட புகழுரைகளிலிருந்து இவர் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஹிருதயத்தில் எவ்வளவு கௌரவமான இடம் பெற்றுவிட்டாரென்பது தெள்ளென விளங்கும்.

பாகவதோத்தமர்களை அன்புடன் வரவேற்று அவர்களுக்கு ஸத்காரம் செய்வதில் ஸ்ரீ அய்யங்காருக்கு ஓர் அலாதி ப்ரீதி. உத்தரதேச யாத்திரையாக டில்லிக்கும் வரும் பல ஸ்ரீ வைஷ்ணவர்கள், ஸ்ரீ வரதராஜய்யங்காரை முன்பின் தெரியாவிட்டாலும், இவர் திருமாளிகையில் ஓரிரண்டு நாட்கள் தங்கி இவர் ஸத்காரத்தைப் பெறுவது வழக்கம். பகவத்—பாகவத கைங்கர்யத்தில் இவருக்கு எவ்வளவு ஆர்வமோ, அதைவிட ஒரு பங்கு அதிகமென்றே சொல்லவேண்டும் அவர் தேவியாருக்கு! இவர் செய்த ஸத்காரம் பரிமளிக்க காரணமாயிருந்தவர் அவர் தேவியார் என்றால் இது முற்றும் உண்மையே.

காஞ்சி மஹாவித்வான். ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமியிடம் ஸ்ரீ வரதராஜய்யங்காருக்கிருக்கும் ப்ரதிபத்தி அபாரமானது. அவரைப்பற்றியும் அவர் க்ரந்தங்களைப்பற்றியும் ஸ்ரீ வரதராஜய்யங்காருக்கு 40-வருடங்களாக பரிசயமுண்டு. "ஸ்ரீ ராமாநுஜன்" பத்திரிகை தபாலில் எப்போது வருமென்று ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்து, அது வந்ததும் முதல் பக்கத்திலிருந்து கடைசி பக்கம்வரை ஒரேமூச்சில் படித்துவிடுவர். மறுபடியும் பல தடவை படிப்பர். ஒவ்வொருதரமும் புதுபுது விஷயங்கள் விளங்குகிறதே என்று ஆச்சரியப்படுவார். "ஸ்வாமி அண்ணங்கராசாரியர் அவதரித்திராவிட்டால் நம் சம்பிரதாயஸ்தர்கள் பொய் பிரசாரங்களில் மயங்கி வழிதப்பிப் போயிருப்பர்கள். ஸ்வாமி தான் நம்போன்றவர் கண்ணைத் திறந்து வைத்தவர்" என்ற திடமான அபிப்பிராயம் கொண்டவர்.

ஸ்ரீ வரதராஜய்யங்காரின் கிராமம் கோயம்புத்தூர் ஜில்லாவைச் சேர்ந்த கனக பாளையம். இவர் கொமாண்டூர்வம்ச பரம்பரையிலவதரித்தவர். இவருடைய பூருவர்கள் ஸ்ரீ காஞ்சி பரமஹம்ஸேத்யாதி வாதிகேஸரி அழகியமணவாள ஜீயர் திருவடி ஸம்பந்திகள். ஸத்ஸம்பிரதாய துரந்தரர்கள்...அவர்களில் சிகரம்போன்று விளங்கினவர் சுமார் 150 வருடங்களுக்குமுன் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் பட்டத்தை அலங்கரித்த ஸ்ரீ திருவேங்கட ராமாநுஜ ஜீயர். இவருடைய திருநாமம் இவர் நம்பெருமாள் கோயில் அடையவளைந்தான் மதில் சுவர் புநருத்தாரணம் செய்த பெருமையால் அமரத்வமடைந்துவிட்டது. பகவத்—பாகவத கைங்கரியமே லட்சியமாகக்கொண்ட இத்திருவம்சத்திலுதித்த ஸ்ரீ வரதராஜய்யங்காருக்கு இத்துறையில் தணியாப்பசியிருப்பதில் ஆச்சரியமில்லையல்லவா? டில்லிமாநகரத்திலிருந்து "ஸ்ரீரங்கே ஸுகமாஸ்ஸ்வ" என்ற ஆஜ்ஞைக்கநுஸாரமாக திருவரங்கம் பெரிய கோயிலுக்கு இம்மாதம் விடைபெற்றுக் கொள்ளுகிறார். அங்கும் இவருடைய பகவத்—பாகவத கைங்கரியங்கள் பல மடங்கு அதிகமாக நடத்த ஆரோக்கியமும் தீர்க்காயுஸ்ஸையும் பெரிய பெருமாள் அருளுவாராக.

ஸ்ரீ வரதராஜய்யங்காரை நினைக்கும்போதெல்லாம் உபேயாதிகாரிகளில் ப்ரதாநரான இளையபெருமாள் படியை விஸ்தரேண விவரிக்கும் கீழ்க்கண்ட ஸ்ரீவசனபூஷண சூர்ணிகை ஞாபகம் வருகிறது :

"பசியராயிருப்பார் அட்டசோறு முண்ணவேணும் அடுகிறசோறு முண்ணவேணு மென்னுமாப்போலே காட்டுக்குப் போகிறபோது இளைய பெருமாள் பிரியில் தரியாமையை முன்னிட்டு, அடிமை செய்யவேணும் எல்லாவடிமையும் செய்ய வேணும் ஏவிக்கொள்ளவும் வேணும் என்றார்; படைவீட்டில் புகுந்தபின்பு, காட்டில் தனியிடத்தில் ஸ்வயம் பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூணுண்ண மாட்டாதே, ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக் குடையையும், ஒரு திருக்கை யாலே திருவெண் சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார்."

இதன்படியே ஸ்ரீ வரதராஜய்யங்கார் ஸ்வாமியும் ஆவர். ... ... ❁

மங்களம்.

# எழுநூறும் எழுபத்தேழும். P.B.A.

எழுநூறு என்பதை முன்னம் விளக்கிவிட்டு எழுபத்தேழென்பதை அடுத்தபடி விளக்குகிறேன். [எழுநூறின் விவரணம்.] ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுருவரர் திருவவதரித்து ஏழுநூறு வருடங்கள் நிரம்பப்போகின்றன அடுத்த 1968 புரட்டாசித் திருவோணத்தில்— என்பது உலகம் பரவியுள்ளது. இந்த ஸப்தசதாப்த பூர்த்தியைக் கொண்டாடுவது பல வழிகளிலாகும். அடியேனுடைய போதுபோக்குக்குத் தக்கபடி ஒருவழி தோன்றிற்று; அதாவது, ஸ்வாமி அபரிமிதமான திவ்யஸூக்திகளை யருளிச்செய்தவராதலால் அவருடைய திவ்யக்ரந்தங்களிலிருந்து எழுநூறு விஷயங்களைத் திரட்டி ஒரு பெரிய நூலாக வெளியிடுவ தென்று. இதைத் தென்மொழியிலும் வடமொழியிலுமாக இரண்டு பாஷைகளிலும் வெளியிடுவதென்று ஸங்கல்பித்தாயிற்று. அடியேன் ஸங்கல்பிப்பதை அருட்கடலான ஆசாரியர்கள் தாழ்வின்றித் தலைக்கட்டிவைப்பது வழக்கமாதலால் இந்த ஸங்கல்பம் நிறைவேறிக்கொண்டே வருகிறது. தமிழில் எழுதுவது நற்பொருளெழுநூறு என்பது. ஸ்வாமியினுடைய திவ்யஸூக்திகளிலிருந்தே இது சேகரிக்கப்பட்டு வருகிறது. இதில், ஸம்ப்ரதாயபேத சர்ச்சையில் சேர்ந்த விஷயம் ஒன்றுகூடப் புகாதபடிக்கும், *கேட்டறி யாதன கேட்கின்றேன்* கண்டறியாதன காண்கின்றேன்* என்று அநஸூயுக்கள் அகமகிழ்ந்து உளங்குளிர்ந்து உரைக்கும்படிக்கும் அமைக்கவேண்டுமென்று திடமான ஸங்கல்பம் செய்துகொண்டேன். இதுகாறும் அடியேனெழுதி வெளியிட்ட உபந்யாஸ சதத்வயம், நல்வார்த்தை நானூறு முதலான பல நூற்றுக்கணக்கான உபந்யாஸ நூல்களிற் காட்டிலும், நற்பொருளெழுநூறு என்று பெயரிடப்பெற்ற இந்நூல் மிக விலக்ஷணமாக அமையும். இது, மாதந்தோறும் ஒவ்வொரு நூறாக ஏழு மாதங்களில் வெளிவந்து முடியும். அதாவது ஸ்ரீ ராமாநுஜன்—227-ல் தொடக்கமாகி 233-ல் முடிவுபெறு மென்றபடி. வர்த்தமாந ப்லவங்கவருஷ ஸமாப்தியில் இது ஸமாப்திபெற்றே தீரும்.

இந்நூலின் தொடக்கத்திலிட்டவொரு வெண்பாவை மட்டும் இங்கு உபஹரிக்க விரும்புகிறேன் ;

**வேதக்கடல்கடைந்த வேதாந்தவாரியர்தம், போதக்கடலாகப் போந்தவிது—கோதற்ற ஞானியர்க்கு நற்செல்வாம் நன்னிதியாம் நல்வீடாம், தேனிலினிதாம் தெளிந்து.**

இனி, ஸம்ஸ்க்ருதத்திலெழுதப்படுவது திவ்யார்த்த ஸப்தசதி என்னும் பெயருடையது. இதில் நிகமாந்தகுரு ஸூக்தி திவ்யார்த்தங்களோடுகூட அவர் ஆதரித்த ஆளவந்தார் முதலான ஆசாரியர்களின் திவ்யஸூக்தி திவ்யார்த்தங்களும் கலந்து கமழும். இது நமது வைதிக மநோஹராமூலமாய் சதகம்சதகமாக ஏழுமாதங்களில் வெளிவந்துலவும். இப்பெரிய மநோரதங்களிரண்டும் இடையூறின்றி நிறைவேறப் பெருந்தேவிமணவாளனை பேரருளாளனும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் உயிர்ப்பிச்சை தந்தருளவேணுமென்பதொன்றையே பிரார்த்தித்து நிற்கின்றேன்.

"எழுநூறும் எழுபத்தேழும்" என்ற மகுடத்தில் எழுநூறுபற்றின விவரணமாயிற்று. இனி எழுபத்தேழுபற்றிய விவரணம் புதிதாகச் செய்யவேண்டியதன்று, நினைப்பூட்டுமத்தனை. ஸ்ரீ ராமாநுஜன் சென்ற இதழில் (225ல்) எழுபத்தேழு பெரியார்களின் பெருமை என்று தொடங்கியிருப்பது க்ரமேண பிரசுரமாகி வந்துகொண்டிருக்கும். அவ்விதழிலேயே (பக்கம் 3ல்) ஸ்ரீ மதுராந்தகம் வித்வான் வீரராகவாசார்ய ஸ்வாமியின் ப்ரஸ்தாவத்தில் விவரித்துள்ளபடி ஸம்ஸ்க்ருதத்திலெழுதப்பட்ட எழுபத்தேழு விஷயங்கள் ஸப்தஸப்ததி ஸதர்த்தமாலிகா என்னும் பெயர்கொண்டு நமது வைதிக மநோஹரா பத்ரிகையில் முடிவுபெற்று [நூற்றறுபதாவது ஸஞ்சிகையாக] வெளிவந்துவிட்டது. மநோஹராக்ராஹகர்களுக்கு மட்டுமே அது கிடைக்குமாதலால் மற்றையோர்கள் ஒரு ரூபா M.O. அனுப்பிப் பெறுக. அகிஞ்சநர்களான வித்வான்களோ வித்யார்த்திகளோ விரும்பினல் அமூல்யமாக அனுப்பப்படும். ... ... ❃

## வேதவேதாந்தவர்த்தினீ—திருவல்லிக்கேணி.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி திருவடிவாரத்தில் ப்ரதிஷ்டிதமான வேத வேதாந்த வர்த்தினீ ஸபையின் தொண்ணூற்றொன்பதாவது வருஷ பூர்த்திக் கொண்டாட்ட விழா 20—9—67 முதல் 24—9—67 வரையில் ஐந்து நாட்கள் திருவல்லிக்கேணியில் மிக்க சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. முதல் நான்கு நாள் ஸ்ரீ வானமாமலை மடத்தில் வித்வான்களின் உபந்யாஸம் நடைபெற்றது. முடிவு நாள் ஞாயிற்றுக்கிழமையன்று பகல் 3-30 மணி முதல் ஸ்ரீ பார்த்தஸாரதியெம்பெருமான் திருமுன்பே பரீக்ஷித வித்யார்த்தி பஹுமானங்களும் உபந்யாஸமும் நடைபெற்று முடிவடைந்தது. இந்த ஸபைக்குச் சிலபல வருஷங்களாக பிரஸிடெண்டு பதவியை அலங்கரித்திருந்த ஸ்ரீ உவே. P. M. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி (Ritered Session Judge) உடல்நிலையை நோக்கி விச்ராந்தி கொண்டமையால் ஸ்ரீ உவே. C. S. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி (B.A.B.L.) அந்த ஸ்தானத்தை யலங்கரித்துச் சிறப்பாக நடப்பித்தார். பல வருஷங்களாக இந்த ஸபையில் ஸெகிரிடெரி பதவியை யலங்கரித்த ஸ்ரீ உவே. ஆசால் சேஷாசாரியர் ஸ்வாமி (Advocate) சில மாதங்களுக்குமுன்பு திருநாடலங்கரித்ததுபற்றி அநுதாபவார்த்தைகளோடு ஸதஸ்ஸு முடிவடைந்தது. ... ... ❃

# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை.

(முன் தொடர்ச்சி—2.)

## 11. ஸ்ரீமதுபயவே. ஆடூர். ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமி.

கீழே (நெ. 7) ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியின் பிரபாவத்தை யெழுதிப் போருகையில் "ஸ்ரீபெரும்பூதூரில் மஹாவ்யாபகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீஉவே. ஆடூர். ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமி ஸந்நிதியிலே அருளிச்செயல்களை ஸாங்கமாக ஓதி பகவத் விஷயாதி க்ரந்தங்களை அதிகரித்தார்" என்றெழுதியிருக்கிறேன். ஆடூர் ஸ்வாமியை அடியேன் இளமையில் ஸேவித்திருந்தாலும் அதிகமாக நெருங்கிப் பழகினதில்லை. திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்தினீ ஸபையில் பரீக்ஷகராக எழுந்தருளின காலத்தில் இரண்டொரு தடவை ஸேவித்ததத்தனை. அக்காலத்தில் இந்த ஸ்வாமியின் ப்ரக்க்யாதி ப்ரபலமாக இருந்தது. இவருடைய திருவுருவப் படத்தை ஸம்பாதிக்க அடியேன் நெடுநாள் முயன்றும் கிடைக்கப் பெருது வருந்தியிருந்தேன். இப்போது சென்னை அட்வகேட் P. B. (பிள்ளைபாக்கம். பஹுகுடும்பி.) அனந்தாசாரியர் ஸ்வாமியின் கிருபையினுல்



பெற்றேன். உலகம் ஸேவிக்க இங்கே பிரசுரித்தேன். மேலேகுறித்த அனந்தாசார்ய ஸ்வாமியும் அவருடைய திருத்தம்பியாரான (அட்வகேட்) P. B. சிங்கராசாரியாரும் கலந்து எழுதியனுப்பின சில குறிப்புகளையும் இதன்கீழ் வெளியிடுகிறேன்.

ஸ்ரீமத் ஆடூர் ஸ்வாமி பல வருஷங்கள் நம்பெருமாள் ஸன்னிதியிலெழுந்தருளி யிருந்து பிறகு ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்திரவாஸியாகி எழுபத்தைந்து திருநக்ஷத்திரம் இவ்விபூதியை அலங்கரித்திருந்தார். 1905ஆ விசுவாவஸு வருஷத்தில் விண்ணுல கெய்தினார். இற்றைக்கு அறுபத்திரண்டாண்டு ஆகிறது. ஸ்வாமி ஸ்ரீ ராமாயணம் பகவத்கீதை பகவத்விஷயம் ரஹஸ்யங்கள் போன்ற க்ரந்தங்களைப் பலகால் ப்ரவசனம் செய்தருளினதோடு தர்க்கசாஸ்த்ர பாடங்களும் பலர்க்குச் சொல்லிவந்தார். ஸ்வாமியின் கடைசிப் புதல்வியும் அடியோங்களுக்குத் தாயாருமான ஆண்டாளம்மாவும் அந்த தர்க்கபாடங்களை ச்ரவணம் செய்தும் மனனம் பண்ணியும் அடிக்கடி சொல்லிக்கொண் டிருந்ததை நாங்களறிவோம். ஸ்வாமியிடம் அந்தேவாஸியாக இருந்து ப்ரஸித்திபெற்ற வித்வான்களில் ஸ்ரீமத் குண்டலம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியென்பவர் தலைவராய் விளங் கினார். அந்த குண்டலம் ஸ்வாமி தமது ஜன்மபூமியான ஆந்திர மண்டலத்திலிருந்தபோது ஆடூர் ஸ்வாமியின் பெருமைகளைக் கேள்விப்பட்டு ஸ்ரீபெரும்பூதூர் வந்து சேர்ந்து தாமும் வித்வானாகிப் பலரையும் வித்வான்களாக்கினார். குண்டலம் ஸ்வாமிக்கு ஆசார்ய ப்ரதிபத்தி அபரிமிதம். நாடோறும் பின்மாலை நான்குமணிக்கே ஆடூர் ஸ்வாமி திருமாளிகை திருக்காப்பு நீக்குவதற்கு முன்னமே வாசற்கடையில் வந்து படுகாடு கிடப்பராம். தாம் ஜீவித்திருந்த வரையில் ஆடூர் ஸ்வாமியின் திருநக்ஷத்ரபரிபாலனமும் செய்துவந்தார் என்று பெரியோர் சொல்லக் கேட்டதுண்டு. ஆடூர் ஸ்வாமியின் ஜ்யேஷ்ட துஹிதாவின் குமாரர் ஸாரநாதாசாரியரென்று ப்ரஸித்தராய் இளமையிலேயே மிகச் சிறந்த வித்வா னென்று புகழ் பெற்றார். மாதாமஹர்க்குமேல் சிறந்து விளங்குவரென்று பலரும் கொண்டாடவிருக்கையில் முப்பது பிராயத்திற்குள்ளேயே ஆசாரியன் திருவடி சேர்ந்து விட்டார். ஆடூர் ஸ்வாமிக்கு ஸ்வீக்ருத குமாரரே ஒருவரிருந்தனர். ஆடூர் பாஷ்யகார ரென்கிற அவருடைய ஜாமாதாவே திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமியென்று ப்ரஸித்த ராய் சென்னையில் ப்ரஸித்த உபந்யாஸகராக விளங்கின மஹான். ... ... ❀

## 12. ஸ்ரீமதுபயவே. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி.

இப்பேராசிரியரின் திருநாமம் கேள்விப்படாத ஸ்ரீ வைஷ்ணவர் ஒருவரும் இருக்க மாட்டார். இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி ஐம்பது ஸம்வத்ஸரங்களானாலும், இற்றைக்கும் வித்வத் கோஷ்டிகளில் இவருடைய திருநாமம் பெரும்பாலும் ப்ரஸக்த மாகியே வருகின்றது. இந்த ஸ்வாமி நியாய வியாகரண வேதாந்தங்களில் சிறந்த பாண்டித்யம் ஸம்பாதித்திருந்ததோடு, பகவத் விஷயத்திலும் ரஹஸ்யப்ரஸ்தானத்திலும் தமிழ் இலக்கியங்களிலும் நிகரற்ற புலமை பெற்றிருந்தார். சென்னைமாநகரில் பத்தெட்டு வருஷங்கள் எழுந்தருளியிருந்து அமுதப்பெருக்கான உபந்யாஸங்களை வெகு ஆச்சரிய மாக ஸாதித்துக்கொண்டிருந்தார். "திருக்கண்ணபுரம் ஸ்வாமி ஸாதித்த விசேஷார்த்தம்"

என்று, நாளைக்கும் பல ரஸிகர்கள் அதிசயமாகச் சொல்லிக்கொண்டிருப்பர்கள். எந்த விஷயத்தையும் இனிமையே வடிவெடுத்ததாக உபந்யஸிக்கும் ஆற்றல் இந்த ஸ்வாமிக்கு அஸாதாரணமாக அமைந்திருந்தது. நாலாயிர திவ்யப்பிரபந்த வியாக்கியானங்கள் முழுவதும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்தபடியால் இவருடைய பேச்சுக்கள் பெருவிலை பெற்று விளங்கின. திருவுருவத் தோற்றமோ வெகு கம்பீரமானது. திருமிடற் றோசையோ குழலையும் யாழையும் வென்று விளங்குமது. சாஸ்த்ரஜ்ஞானத்தோடு கூடிய ஸம்ப்ரதாயஜ்ஞானம் விசேஷித்திருந்தபடியால் புகழ் மிக்கது.

அடியேனுடைய மாதாமஹரான ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜ (ஷஷ்டி) ஜீயர் ஸ்வாமி தம்முடைய பிரவசனங்களில் வாய்மோட்டு வரதாசாரியர் ஸ்வாமி யென்று அடிக்கடி ப்ரஸ்தாவித்து அவருடைய உபயவேதாந்த ப்ரவசன பாடவத்தைக் கொண்டாடிஸாதிப்பதுண்டு. அவர் பட்டப்பாஸ்வாமியின் ஸாக்ஷாத் பிதாமஹர். அவரோடு ஜீயர்ஸ்வாமிக்கு மிக நெருங்கிய பழக்கமிருந்ததாம். அவர் நமது பூர்வாசார்ய க்ரந்தங் களில் மிக ஆழ்ந்த ஞானமுடையவராம். திருக்கண்ணபுரத்திற்கு அணித்தான வாய்மோடு என்கிற அக்ரஹாரத்தில் அந்த ஸ்வாமி ஜனித்தவராதலால் அவரையும் அவரைச் சேர்ந்தவர் களையும் வாய்மோட்டார் என்று வழங்குவர்களாம். அக்காலத்தில் மோட்டார் (Motar car) நமது நாட்டில் வந்தது கிடையாதாம்; பட்டப்பா ஸ்வாமி காலத்தில்தான் மோட்டார் இந்தியாவில் ஓட ஆரம்பித்ததாம். அதனால் பட்டப்பா ஸ்வாமி அடிக்கடி ஸாதிப்பர் "இது தரைமோட்டார்; நாம் வாய்மோட்டார்" என்று. வாய்மோடு என்னும் கிராமத்தில் பிறந்ததனால் வாய்மோட்டார் என்பது தவிர, மோட்டார்போல் வாய் வீசுபவர் என்பது சமத்காரோக்தி. இத்தகைய சமத்காரோக்திகள் பட்டப்பாஸ்வாமியிடம் அபரிமிதம்.

இவருடைய திருக்குமாரன் விஜயராகவனென்பவன் மஹா மேதாவியாய் த்வீபாந்த ரஸ்தர்களாலும் பாராட்டப்பட்டிருந்து நாற்பத்தைந்து வயதுக்குள்ளாகவே நாமாவ சேஷனுய்விட்டான். அவனுடைய குமாரர்கள் லௌகிக பதவிகளில் ப்ரதிஷ்டிதர்களாய் விளங்குகின்றார்கள். ... ... ... ❁

## 13. ஸ்ரீமதுபயவே. காழியூர். ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி.

இந்த ஸ்வாமி ஒரு விலக்ஷண பண்டிதராய் விளங்கினவர். நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு திருநாட்டுக்கெழுந்தருளினர். *ரூபமேவாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே* என்கிறபடியே மிகவும் கம்பீரமான திருவுருவத் தோற்றத்துடன் எழுந்தருளியிருந்தவர். நான்கு சாஸ்த்ரங்களையும் முறைப்படி அதிகரித்து ப்ரவசனங்களும் அழகாகச் செய்துபோந்தவர். இளம்பிராயத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வந்துசேர்ந்து அவ்விடத்திலேயே வித்யாப்யாஸம் செய்து அவ்விடத்து ஸம்ஸ்க்ருத கலாசாலையில் ஸ்ரீமத். உ.வே. வித்வத்சிகாமணி குண்டலம் நரஸிம்ஹாசாரிய ஸ்வாமிக்கு அடுத்தபடியாக ப்ரதாநாத்யக்ஷ பதவியை வஹித்து அநேகரை வித்வான்களாக்கின மஹான் இவர். உபய வேதங்களிலும் இந்த ஸ்வாமி யோக்யதை பெற்றிருந்தவர். மேலே குறித்த ஸ்ரீமத்

குண்டலம் ஸ்வாமி முதலான பல மஹநீயர்களின் திருவடிகளிலே பணிந்து ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை அதிகரித்தவர். திருப்பதியில் ஸுப்ரஸித்த வித்வச் சிகாமணியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசாரிய ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தம் பெற்றவரான இவ்வாசிரியர்க்கு விளைந்த அதிசயங்கள் அற்புதமல்ல. இவருடைய ஞானத்திற்காட்டிலும் பரம ஸாத்விகத்வம் போற்றத்தக்கதாயிருந்தது.

## 14. ஸ்ரீமதுபயவே. மண்டயம். அனந்தாழ்வார்ஸ்வாமி வைபவம்.

[அடியேன் நேரில் ஸேவித்தறியாதவன்.]

இந்த மஹான் [கி. பி. 1822ஆு ஏப்ரல் மாதத்தில்] சகாப்தம் 1745, ஸ்வபாநு ஸம்வத்ஸரம் பங்குனித்திங்களில் ஆச்லேஷா நக்ஷத்திரத்தில் மண்டயத்தில் ஜனித்து திருநாராயணபுரத்தில் ஸ்வீகாரம் வந்தவர். இவர் ஆதிசேஷனுடைய அநுக்ரஹத்தினால் அவதரித்தாரென்றும் ஆனது பற்றியே ஆதிசேஷனுடைய திருநாமம் இவர்க்கு இடப் பட்டதென்றும் சொல்லுகிறார்கள். ஜ்யோதிஷ்மதிலதையின் தைலம் உண்பித்து மேதையின் அபிவிருத்தி செய்விக்கப் பெற்றவரிவர் என்றும் கூறுகிறார்கள். மைஸூரில் ஸ்ரீ கூளீபாளாசார்யரிடத்தில் இவர் சாஸ்த்ரங்கள் பயின்றார். தமது ஜநகபிதாவாகிய ஸ்ரீ மஹாபாஷ்ய சிங்கராசாரியர் ஸ்வாமி ஸந்நிதியில் ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி க்ரந்தங்களை அதிகரித்தார். மைஸூர் இலாகாவைச் சேர்ந்த 'ச்ரவண பெள கொளா' என்னுமிடத்திற்கு அருகிலுள்ள ஒரு ஜைந மடத்தில் அந்த மடாதிபதிக்குப் பாடப்ரவசநம் செய்யும்பொருட்டு இவர் அழைக்கப்பட்டு எழுந்தருளியிருந்தார். ப்ரஹ்மஸூரி பண்டித ரென்கிற அந்த மடாதிபதிக்கு இவர் மூன்று வருஷகாலம் ஸாஹித்ய சாஸ்த்ர பாடங்கள் கற்பித்துக் கொண்டிருந்தார். அப்போது அவ்விடத்துப் புஸ்தகசாலையிலிருந்த ஸௌகத, ஆர்ஹத மதக்ரந்தங்களையெல்லாம் நன்கு ஆராய்ச்சி செய்ய இவர்க்கு அவகாசம் ஏற்பட்டு அவற்றிலும் நிரம்பிய நைபுண்யம் பெற்றார்.

இவருடைய பாண்டித்யப்ரஸித்தி மிகவும் ஓங்கி வளர்ந்தது. மைஸூரில் பரகால மடாதிபதியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீ ஸ்ரீநிவாஸ ப்ரஹ்ம தந்த்ர ஸ்வாமிகள் ஒருகால் திருநாராயணபுர மஹோத்ஸவத்திற்கு எழுந்தருளியிருந்து இவருடைய ஒப்புயர்வற்ற வைதுஷ்யத்தைக் கடாக்ஷித்து வியந்து இவரைத் தமது மடத்தில் ஆஸ்தாந பண்டிதாக்ரேஸரராக வரித்துக்கொண்டார். அப்போது இவர்க்கு வயது 27. அப்போதே இவர் சதுச்சாஸ்த்ரபாரங்கதராய் வாக்யார்த்தம் சொல்லுவதில் ஒப்பற்றவராய் க்ரந்தங்கள் எழுதுவதிலும் நிகரற்றவராய் விளங்கிப் பெரும்புகழ் படைத்தார். ஸ்ரீ பரகால ஸ்வாமியோடு யாத்திரையாகவும் இவர் எழுந்தருளியிருந்து ஆங்காங்கு மதாந்தரஸ்த வித்வான்களை வாதில் வென்று பலரைத் திருத்தியும் பணி கொண்டார். அப்போதிருந்த மைஸூர் மஹாராஜரும் இவரை மிகச் சிறப்பாக ஸன்மானித்தார். இவருடைய திருமூக்கு கருத்மானுடைய மூக்குப் போன்றிருக்குமாம். அதனால் இவரை மூக்குஸ்வாமியென்று அக்காலத்தவர்கள் வழங்கிவந்தார்களாம்.

இந்த மஹான் அனேக வேதாந்த வாதக்ரந்தங்களையும் அலங்கார க்ரந்தங்களையும் தர்க்கசாஸ்த்ரத்தில் வாதக்ரந்தங்களையும் செய்தருளியிருக்கிறார். இவர் இயற்றியருளின வேதாந்த வாதாவளியில் பரிசயமின்றிக்கே ஸ்ரீ பாஷ்யாதிக்ரந்தங்களை நிர்வஹிப்பவர்கள் வேதாந்திகளாகக் கருதப்படுவதில்லை. எனவே, இவருடைய வாதக்ரந்தங்களில் பரிபூர்ண அவகாஹநம் பெற்றவர்களுக்கே வேதாந்த மருமங்கள் விளங்குமென்பது ஸர்வ நிர்விவாதம்.

இந்த ஸ்வாமி நாற்பது திருநக்ஷத்ரமே இந்த விபூதியில் எழுந்தருளியிருந்தார். இவர் எம்பெருமானாரை ஸாக்ஷாத்கரித்தவர் என்று ஒரு ஐதிஹ்யம் சொல்லிப்போருவர்கள். அதாவது மாயாவாதிகளுக்கு முக்கிய க்ரந்தமாகிய அத்வைத ஸித்தியென்னும் க்ரந்தத்திற்குக் கண்டனமாக ந்யாயபாஸ்கரமென்கிற மிகச்சிறந்த க்ரந்தத்தை இந்த ஸ்வாமி செய்தருள ஆரம்பித்து முதல் பரிச்சேதம் எழுதி முடித்தவன்று மிகப்ரபல வித்வான்களான சில அத்வைதிகள் இதையறிந்துவந்து வாதப் போருக்கழைத்துப் பலவகையான குத்ஸித வாதங்களைப் பண்ணினார்களாம். அப்போது பரகால மடத்தில் வித்வான்களாயிருந்த சில ஸ்ரீ வைஷ்ணவர்களும் "ஸ்ரீமத் வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தராயிருக்கின்ற இவரை நம் ஸம்ப்ரதாயஸ்தராக ஆக்கிக்கொள்வதற்கு இதுவே நல்ல ஸமயம்" என்று பார்த்து அவர்கள் ஸ்ரீமத் வரவரமுநி விஷயமான தூஷணைகளைப் பொழிந்து இவருடைய திருவுள்ளத்திலே மிகவும் காலுஷ்யத்தை யுண்டுபண்ணினார்களாம். இவ்விரண்டு வகையான ஸம்பவங்களால் இந்த ஸ்வாமி மிகவும் திருவுள்ளம் கலங்கித் திருக்கண்வளர்ந் தருளுகையில் அன்றிரவு கனவிலே ஆதிசேஷன் முதலிலே எம்பெருமானாராகவும் பிறகு மணவாளமாமுனிகளாகவும் இவர்க்கு ஸேவை ஸாதித்து நல் தெளிவு பிறப்பித்ததாக.

இவ்விஷயத்திற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகவே அந்த ந்யாய பாஸ்கரத்தில் இரண்டாவது பரிச்சேதத்தின் உபக்ரமத்தில், "சேஷ: ஸ்ரீமாந் நிகமமகுடயுக்மரக்ஷா ப்ரவ்ருத்த: ஸ்ரீமத்ராமாவரஜமுநிதாம் ரம்யஜாமாத்ருதாஞ்ச், விந்தந் த்ருப்யத்விமதபடலீ பாடனோத்தாம்ஸஉக்தி: பூயாத் பவ்யப்ரதிதமஹிமா ச்ரேயஸே பூயஸே ந:" என்கிற சுலோகத்தை நிவேசிப்பித்தருளினார்.

மற்றும் இவருடைய வைபவங்கள் இன்னமும் விரிவாக அறியவேண்டியவை பலவுள; அவை, இவருடைய பாகிநேயரான (பெங்களூர்) கல்கிஸிம்ஹம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி வெளியிட்டிருக்கிற வைபவப்ரகாசிகையிலிருந்து அறியத்தக்கன. இந்த வைபவ ஸங்க்ரஹமும் அதிலிருந்தே தொகுக்கப்பட்டது.

## 15. ஸ்ரீமதுபயவே. விரக்தி. பாஷ்யகாராசார்ய மஹாஸ்வாமி.

திருப்புட்குழி ஸமீபத்திலுள்ள முஸரபாக்கத்தில் ஸ்ரீமத் விரக்திபாஷ்யகாரர்ஸ்வாமி யெழுந்தருளியிருந்தார். இவர் வியாகரண மீமாம்ஸைகளில் பரிபூர்ணபாண்டித்யம் பெற்றிருந்ததோடு உபயவேதாந்தங்களிலும் அகாதமான ஞானமுடையவர். அவரை 'நீறுபூத்த நெருப்பு' என்றே யாவரும் சொல்லுவர்கள். காஞ்சீபுரத்தில் ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி ப்ராந்தத்திலுள்ள பல பெரியார்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் காலக்ஷேபம் செய்யவேணுமென்று ஆவல்கொண்டு இந்த மஹா ஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப்பண்ணி அவ்விடத்திலேயே ஸ்திரவாஸியாகவைத்து யதோக்தகாரி ஸன்னிதியில் பொய்கையாழ்வார் திருமண்டபத்தில் நித்யமும் காலை மாலைகளில் ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசநம் நடந்துவரும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். அப்படி 15, 20 வருஷகாலம் நடந்தது. அக்காலத்தில் பிரபல உத்யோகஸ்தர்கள் வக்கீல்கள் வைதிகர்கள் பலரும் இந்த ஸ்வாமி பக்கலிலே உபயவேதாந்த ரஹஸ்யங்களையெல்லாம் வரியடைவே ச்ரவணம் செய்துவந்தார்கள். அதுவொரு நல்லடிக்காலமென்னவேணும். இந்த ஸ்வாமிக்கு ஸ்ரீவசநபூஷண மீமாம்ஸா பாஷ்யம், ரஹஸ்யத்ரய மீமாம்ஸா பாஷ்யம், பாலஸரஸ்வதீ ப்ரணீத தாத்பர்யதீபிகை, ஸம்ப்ரதாயசந்திரிகை......இத்யாதிகளான அர்வாசீந உத்துங்க க்ரந்தங்களிலும் விசேஷமான உபஸ்திதியுண்டு. அந்த க்ரந்தங்கள் யாவும் அந்த ஸ்வாமிக்குத் தவிர வேறு எந்த வித்வானுக்கும் வசப்பட்டிருக்கவில்லையென்று திண்ணமாகச் சொல்லலாம். அந்த க்ரந்தங்களையெல்லாம் அந்த ஸ்வாமி ஸன்னிதியிலே வாசிக்க வேணுமென்று அடியேனுக்கு அபிலாஷையுண்டாயிற்று. முன்னம் ப்ரஸ்துதரான ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியிலே ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை யதிகரித்து வித்வானுயிருந்த தாமல் குட்டி ஸ்வாமியும் அப்போது காஞ்சியில் வாஸமாக வந்திருந்தபடியால் இருவருமாகச் சேர்ந்து அதிகரிப்பதென்று முடிந்தது. நெடுக வாசித்துக் கொண்டே போவது, ஸந்தேஹமுள்ளவிடங்களில் கேட்டுத் தெளிவது—என்கிற ப்ரக்ரியையில் நடந்து சென்றது. அப்போது அந்த க்ரந்தங்கள் அச்சேருமல் ஓலையேட்டிலும் காகிதத்திலுமே யிருந்தபடியால் அவற்றை விரக்தி ஸ்வாமியின் உதவிகொண்டு பரிஷ்கரித்து அச்சிடவும் ஆரம்பித்தேன். அப்போது தெலுங்கு லிபியில் அச்சிடுவதற்கு விசேஷ ஸௌகரியமிருந்தபடியாலே அந்த லிபியிலேயே அச்சிடத் தொடங்கினேன். முதலில் ஸம்ப்ரதாயசந்திரிகா என்கிற ஏழு ப்ரகாசம்கொண்ட உயர்ந்த க்ரந்தத்தை யச்சிட்டேன். பிறகு, புருஷகாரமீமாம்ஸை, ரஹஸ்யத்ரய காரிகாவளீ என்கிற க்ரந்தங்களை யச்சிட்டேன். அதன் பிறகு ரஹஸ்ய விவேகமென்கிற மணிப்ரவாளக்ரந்தம். அதன் பிறகு ரஹஸ்யத்ரய மீமாம்ஸா பாஷ்யத்தை யச்சிடத் தொடங்கினேன். இது மிகப்பெரிய க்ரந்தம். மூலமந்த்ரத்தில் ப்ரணவ நமஸ்ஸுக்கள் வரைக்குமே இதில் விசாரம் நிகழ்ந்திருக்கிறது. அவ்வளவுக்கே க்ரந்தம் மிகப் பரந்திருக்கிறது. அதை யச்சிடுவதற்கு விசேஷ த்ரவ்ய உபபத்தி அபேக்ஷிதமாயிருந்தது. [மேல் நிகழ்ச்சியை மேலே காண்க.] ... ❁

## 16. ஸ்ரீமதுபயவே. S. கோபாலஸாமி ஐயங்கார் ஸ்வாமி.

சென்னை மயிலாப்பூரில் ப்ரஸித்த அட்வகேட்டாக விளங்கினவர் S. கோபாலஸாமி ஐயங்கார். ஜகத்ப்ரஸித்தராய் இற்றைக்கும் ஸேவை ஸாதித்தருளாநின்ற ஸ்ரீமதுபயவே. ஸர். S. வரதாசார்ய ஸ்வாமியின் ஸாக்ஷாத் மாதுலர் இவர். உபயவேதாந்தங்களையும் வரியடைவே கற்றவர். [இவர் ஸ்ரீமத் வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தர்.] திருநாராயணபுரத்தில் ப்ரஸித்த வித்வன்மணியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. மண்டயம். ஆழ்வார் ஸ்வாமியைச் சில வருஷகாலம் தமது பங்களாவில் எழுந்தருளப்பண்ணிவைத்து அவர் ஸன்னிதியிலே உபயவேதாந்த ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் நன்கு அதிகரித்துப் பல வக்கீல்களுக்கு ப்ரவசனமும் செய்தவர். அடியேனுடைய மாதாமஹ ஜீயர் ஸ்வாமி ஸன்னிதிக்கு அடிக்கடி வந்து பஹுச்ருதாக்ரேஸரர் என்று ஸ்வாமியால் விருது சாத்தப் பெற்றவர். சென்னையில் அஹோபிலமடத்துப் பத்ரிகையாக முதன்முதலில் ஆரம்பம் செய்யப்பட்ட வேதாந்ததீபிகா பத்ரிகைக்கும் சில வருஷகாலம் ஸம்பாதகராக இருந்தவர் இந்த ஸ்வாமி.

இவர், மேலே ப்ரஸ்தாவித்த விரக்தி பாஷ்யகார ஸ்வாமியின் பெருமைகளைக் கேள்விப்பட்டு அவருடைய ப்ரவசந கோஷ்டியில் இரண்டொருநாள் அந்வயித்துப் போகவேணுமென்றே காஞ்சிக்குவந்து, அப்படியே அந்வயித்திருந்தகாலத்தில், ஸம்ப்ரதாய சந்த்ரிகாதிகளான சில க்ரந்தங்கள் அச்சிட்டு முடிந்திருப்பதையும் இன்னும் சில பெரிய க்ரந்தங்கள் அச்சிடவேண்டியிருப்பதையும் அடியேன் விஜ்ஞாபித்து இதை தேவரீரே நிறைவேற்றிவைக்க வேணுமென்று பலருடன் சேர்ந்து ப்ரார்த்தித்தேன். ஸமயம் நல்ல ஸமயமாயிருந்தபடியால் அந்த ஸ்வாமி ஒருவிதமான தடையும் சாக்குபோக்கும் சொல்லாமல் 'எத்தனை பாரமாகும்? என்ன செலவாகும்?' என்றுகூட வினவாமல் "அச்சுக்கூடத்தில் கொடுக்கும்படியாக மாத்ருகை ஸித்தமாயிருக்கிறதோ? இருந்தால் இப்போதே அடியேன் கையில் கொடுத்துவிடலாம்; நாளையிலிருந்தே அச்சிட ஆரம்பித்து ப்ரூப் காபிகளை இவ்விடத்திற்கே அனுப்பிவரத் தடையில்லை" என்று அவலீலையாக ஸாதித்துவிட்டார். அக்காலத்தில், சென்னைமாநகரில் வாழ்ந்துவந்த கராலபாடி ஆழ்வாரய்யா என்கிற த்ரைவர்ணிகர் வித்வானுயும் விசேஷ தனிகராயுமிருந்தபடியால் ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபகஸபை யென்னும் பெயரால் ஒரு ஸபையை ஏற்படுத்தி அது சாச்வதமாக நடக்கும்படியான திட்டங்களும் செய்திருந்தார். அந்த ஸபையின் மூலமாக நம்முடைய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் நூற்றுக்கணக்காக அச்சிடப்பட்டிருக்கின்றனவென்பது ஜகத்ப்ரஸித்தம். ட்ரஸ்டிகளின் அவதானக் குறைவினுல் அந்த ஸபை இப்போது அஸத்கல்பமாயிருந்தாலும் அது நன்ருக வேலை செய்துகொண்டிருந்த காலத்தில் அந்த ஸபைக்கு, இந்த கோபாலஸ்வாமி ஐயங்கார் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார். அடியேன் முத்ரணம் செய்யவேணுமென்று தெரிவித்த க்ரந்தங்களையெல்லாம் அந்த ஸபையின் மூலமாகவே அச்சிடுவிக்க நிச்சயித்த அந்த மஹான் அதிஸ்வல்ப காலத்திலேயே அத்தனையும் தெலுங்கு லிபியிலேயே அச்சிடுவித்து முடித்தார். ரஹஸ்யத்ரய மீமாம்ஸா பாஷ்யம், பாலஸரஸ்வதியின் தாத்பர்ய தீபிகை, கடிநபத தீபிகையோடு கூடின சரமச்லோக டிப்பணி .....இத்யாதிகளான உத்க்ரந்தங்களெல்லாம் அடியேனுடைய முயற்சியினுல் வெகு விரைவாகவே அச்சேற்றப்பட்டு முடிந்தன. அவ்வதிசயம் எழுதி

முடியாது. அந்த ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையும் அதன் காரியங்களும் சென்னைமாநகரில் நடந்துகொண்டிருந்தன. அப்படியிருக்க, அச்சுக்கூடத்தையும் இதற்காகவே காஞ்சீபுரிக்கு அனுப்பி பெரிய காஞ்சியில் ஸ்தாபித்து, ஸபா பண்டிதர்களான இருவரை இவ்விடத்திலேயே வந்து வஸிக்கச் செய்து, இரவுபகலாக வேலை நடக்கும்படி திட்டம் செய்து, அதிமாநுஷக்ருத்யமென்னும்படி அதித்வரையில் முடித்து வைத்த அதிசயம் நெஞ்சால் நினைப்பரிதே. ஸ்ரீ வசநபூஷண மீமாம்ஸா பாஷ்யம் மட்டும் அதற்கு முன்னமே ஸ்ரீமத் யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி (தெலுங்கு லிபியில் அதிஸூக்ஷ்மமான அக்ஷரத்தில்) ஒருவாறு அச்சிட்டிருந்தார். அதை அடியேன் இருபது வருஷங்களுக்குமுன்பு தேவநாகரலிபியில் அச்சிட்டிருக்கிறேன். இந்த க்ரந்தம் அபூர்ணம்; கிடைத்திருக்கிறவரையில் அச்சிட்டிருக்கிறேன். ஆனால் இது இப்போது துர்லபம். ❁

## 17. ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகியசிங்கர் ஸ்வாமி.

நெடுநாள் அஹோபிலமடாஸ்தானத்தை யலங்கரித்திருந்து 15 வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்த ஸ்ரீமத் இஞ்சிமேடு ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் இஞ்சிமேடு ரங்கநாதாசார்ய ஸ்வாமியென்று வ்யபதிஷ்டர். திருப்பதியில் ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் நெடுநாள் வாழ்ந்து ஸாமாந்ய சாஸ்த்ரங்களை யதிகரித்து உபய வேதாந்த ப்ரவர்த்தந ப்ரவீணராய் காஞ்சியில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார். அடியேனுடைய க்ருஹத்திற்கு அதிஸமீபத்திலேயே ஒரு திருமாளிகையை ஸ்வகீயமாகக் கொண்டு குடிவாழ்ந்து வந்தார். அப்போது இருவோமுக்கும் மிக நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது. அனுஷ்டானத்திற்கு வெள்ளக்குளமெழுந்தருள்வர். அடியேனுடைய க்ருஹத்தின் பக்கத்திலுள்ள ஸந்து வீதி வழியாகவே அக்குளத்திற்குச் செல்லவேண்டுமாதலால் இருவரும் ஒன்றுசேர்ந்தே குளம் செல்வது தினப்படியான வழக்கம். திரும்புகிற ஸமயத்தில் சேர்த்தி ஏற்படுவது அரிதாகும். செல்லுகிற ஸமயத்தில் நியமேந சேர்ந்து தான் செல்வது. அப்போதைய ஸம்பாஷணைகள் ஐம்பது வருஷங்களுக்கு மேலானாலும் மறக்க முடியாதவை. திருப்பதியில் தாம் வாழ்ந்தபோது ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலிலே தாம் அநுபவித்த விசேஷங்களை ஒவ்வொருநாள் ஒவ்வொன்றாக ஸாதித்தருள்வர். மற்றும் அநேக க்ராந்திக விஷயங்களையும் ஸாதித்தருள்வர். இடையிடையே ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகளும் நடைபெறும். கோபதாபங்கள் சிறிதுமில்லாமல் புன்முறுவலோடே ஸாதிப்பர்; தூமுறுவல்கொண்ட முகத்துடனே கேட்டருள்வர். மனச்சாக்ஷியை மீறியோ அப்ராமாணிக வழியை யவலம்பித்தோ விதண்டாவாதமாகவோ ஓரக்ஷரமும் ஸாதிக்கமாட்டார். அந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்து அநுபவித்த குணமிது. பெருங்கட்டூர் கண்டாவதாராசார்ய ஸ்வாமி யென்றொருவர் ஸன்னிதி வீதியிலெழுந்தருளியிருந்தார். அவர் கேவல வையாகர்ணர். கோவில் பாடசாலையில் பல வருஷங்கள் வ்யாகரணப்ரவசநம் செய்துகொண்டிருந்தவர். அந்த ஸ்வாமியின் இயல்வு இஞ்சிமேடு ஸ்வாமியின் இயல்வுக்கு நேர்மாறானது. விஷயசர்ச்சை யென்றெடுத்தால், அது எந்த விஷயமானாலும்ஸரி, கோபதாபங்களில்தான் பர்யவஸித்து நிற்குமவர்க்கு. உச்சைருத்கோஷம் ப்ரபலமாயிருக்கும். இஞ்சிமேடு ஸ்வாமியின் கம்பீர ப்ரக்ருதிகளை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு கனிந்திருக்கும். ... ... ... ❁

## 17. தஹராதிகரணம்

— முதலத்யாயம் – மூன்றுவது பாதத்திலுள்ளது —

ச்சாந்தோக்யோபநிஷத்தில் *அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேச்ம தஹரோஸ்மிந்நந்தரஆகாச: தஸ்மிந் யதந்தஸ் தத் அந்வேஷ்டவ்யம்* இத்யாதி வாக்யத்தாலே ஓதப்பட்டிருப்பது தஹரவித்யை. இந்த வித்யாப்ரகரணத்தில் மேலே *ஏஷ ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜிகத்ஸ: அபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:* என்று குணஷ்டகம் சொல்லப்பட்டுள்ளது. இது பரப்ரஹ்மத்திற்கே ஏற்குமாதலால் தஹர சப்த வாச்யமான வஸ்து பரப்ரஹ்மமேயல்லது வேறன்று என்று இவ்வதிகரணத்தில் நிஷ்கர்ஷிக்கப்படுகிறது.

"தஹரோஸ்மிந்நந்தர ஆகாச:" என்றோதப்பட்ட தஹராகாசம் பரமாத்மாவாக இருக்கமுடியாது. ஏனென்றால், இங்கு *தஸ்மிந் யத் அந்தஸ் ததந்வேஷ்டவ்யம்* என்றுள்ளது. அந்வேஷ்டவ்ய மென்பதற்கு – தேடத்தகுந்ததென்று பொருள். தியானிக்கத்தகுந்ததென்று பரமதாத்பர்யம். 'அந்த பரம்புருஷன் தியானிக்கத்தகுந்தவன்' என்றிருந்தால் ஒக்கும்; அப்படியில்லை; 'அதற்குள்ளேயிருப்பது தியானிக்கத்தகுந்தது' என்றுள்ளதனால் ப்ரமபுருஷபரத்வம் இங்குச் சொல்ல வொண்ணாது; ஆகாச சப்தத்திற்கு பூதாகாசத்தில் ப்ரஸித்தி அதிகமாக இருப்பதால் இங்கே தஹராகாசமாக ஓதப்பட்டிருக்கும்வஸ்து பூதாகாசமேயாகும்– என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக, ஸித்தாந்தம் வருமாறு:—

ஸூ, தஹர: உத்தரேப்ய: 1-3-13.

ப்ரக்ருத ஸ்தலத்தில் மேலேயுள்ள வாக்யத்தில் ஓதப்பட்ட தருமங்களினால் [அந்த தருமங்கள் பொருந்தவேண்டியதற்காக] தஹராகாச சப்தத்தினால் பரமபுருஷனே சொல்லப்படுகிறானென்று நிஷ்கர்ஷிப்பதாக ஸூத்ரத்தின் பொருள் எளிதாக அறியத்தக்கது. *தஹரோஸ்மிந்நந்தர ஆகாச:* என்று தஹராகாசத்தை ப்ரஸ்தாவித்து *தஸ்மிந் யத் அந்த:* என்று அதனுள்ளே யிருப்பதாகவொன்றையும் ப்ரஸ்தாவித்து "தத் அந்வேஷ்டவ்யம்" என்று தச்சப்தத்தாலே – ப்ரஸ்துதமான தஹராகாசமென்ன, அதனுள்ளே யிருக்கிற வஸ்துவென்ன ஆக இரண்டையும் எடுத்து இரண்டையும் உபாஸிக்கும்படி சொல்லிவிட்டு 'அதனுள்ளே யிருப்பது எது?' என்று கேட்டுக்கொண்டு "அஸ்மிந் காமாஸ் ஸமாஹிதா:; ஏஷ ஆத்மா அபஹதபாப்மா..........ஸத்யகாமஸ் ஸத்ய ஸங்கல்ப:" என்று ஓதப்பட்டிருப்பது ப்ரஸித்தம். இதனால் நாம் ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொள்வதென்னவென்றால், முன்னே ப்ரஸ்தாவிக்கப்பட்ட தஹராகாசம் பரமாத்மாவென்றும், அதனுள்ளே யிருக்கும் வஸ்து அபஹத பாப்மத்வம் முதலிய எண்குணமென்றும், அந்த தஹராகாசமே *ஏஷ ஆத்மா அபஹதபாப்மா* என்று அஷ்டகுண யுக்தமாக ஓதப்பட்டதென்றும் தெரிந்துகொண்டோம். ஆகாச சப்தமிருப்பதால் பூதாகாச ஆதீதிதானே யுண்டாகுமென்கிற வாதமும் அயுக்தம். *ஆகாசோஹ வை நாமரூபயோர் நிர்வஹிதா* இத்யாதிகளில் ஆகாச சப்தம் பரமபுருஷ

னிடத்திலும் ப்ரஸித்தமா யிருப்பது காணலாம். ஆக, தஹராகாச சப்த நிர்திஷ்டன் பரமபுருஷனே யென்றதாயிற்று. கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் *வந்தேய ஸுந்தரபுஜம் புஜகேந்த்ரபோகஸக்தம் மஹாவநகிரி ப்ரணயப்ரவீணம், யம் தம் விதுர் தஹரமஷ்டகுணேப்ஜஜுஷ்டமாகாசம் ஔபநிஷதீஷு ஸரஸ்வதீஷு.* என்கிற சுலோகத்தில் இவ்வதிகரணார்த்த ஸாரத்தை அமைத்திருப்பது உணரத்தக்கது. ... ... ... ... ... ... (17)

## 18. ப்ரமிதாதிகரணம்.

இதுவும் முதலத்யாயம் மூன்ருவது பாதத்திலுள்ளது.

*அங்குஷ்ட மாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி, ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே.* என்று கடவல்லியில் ஓதப்படுகிறது. கட்டைவிரலளவான புருஷன் ஆத்மமத்யத்திலிருக்கிருனென்றும், அவன் பூதபவ்யங்களுக்கு ஈச்வரனென்றும் இதில் சொல்லிற்று. இந்த புருஷன் யாவன்? ஜீவபுருஷனுகவுமிருக்கமுடியாது, பரமபுருஷனுகவுமிருக்க முடியாது. ஏனென்னில்; ச்வேதாச்வதரோப நிஷத்தில் *வாலாக்ர சதபாகஸ்ய சததா கல்பிதஸ்ய ச, பாகோ ஜீவஸ் ஸ விஜ்ஞேய:* என்று அத்யந்தம் அணுபரிமாணனுகச் சொல்லப்பட்ட ஜீவாத்மாவுக்கு அங்குஷ்ட பரிமாணத்வம் ஸம்பவிக்கமாட்டாது. விபுவான ப்ரமபுருஷனுக்கும் அங்குஷ்டமாத்ரத்வம் ஸம்பவிக்க விரகில்லை. ஆனுல், ச்வேதாச்வதரோபநிஷத்தில் *ப்ராணுதிபஸ் ஸஞ்சரதி ஸ்வகர்மபி:, அங்குஷ்டமாத்ரோ ரவிதுல்யருப:* என்று கர்மபரவசனுன ஜீவனுக்கு அங்குஷ்டமாத்ரத்வம் சொல்லப்பட்டிருக்கக் காண்கிறதேயென்று ஒருவாதம் எழும். கீழே உதாஹரித்த *வாலாக்ரசதபாகஸ்ய* இத்யாதியான [ச்வேதாச்வதரத்திலேயேயுள்ள] ப்ரமாணத்திற்கு விருத்தமானவிது எங்ஙனே சேருமென்று கேட்க நேரும். ஹ்ருதயத்தினுள்ளே யிருப்பதாகச் சொன்னபடியாலே ஹ்ருதயோபாதிகமாக நிர்வஹித்துவிடலாமென்னில், இந்த நிர்வாஹம் ப்ரமபுருஷனிடத்திலுமொக்கும். உபாஸகாநுக்ரஹார்த்தமாக உபாஸகஹ்ருதயத்திலிருப்பதனுல் ஹ்ருதயம் அங்குஷ்டபரிமாணகமென்று கொண்டு ததுபாதிகமாகச் சொல்லலாமென்றபடி. ஏவஞ்ச, அங்குஷ்டமாத்ரத்வம் ஜீவாத்மபரமாத்மாக்களிருவர்க்கும் பொதுவென்று தேறும். பரமாத்மாவே இங்கு விவக்ஷிதனென்று எதுகொண்டு நிர்ணயிப்பதென்னில்; *ஈசாநோ பூதபவ்யஸ்ய* என்று சொல்லப்பட்ட ஸர்வேச்வரத்வம் அஸங்குசிதமாகப் பரமபுருஷனிடத்தில்தான் ஸம்பவிக்கும்; *ய: ப்ருதிவ்யாம் திஷ்டந்* இத்யாதியான அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் *ய: ப்ருதிவீம் அந்தரோ யமயதி* இத்யாதியாலே சொல்லப்பட்ட ஸர்வ நியாமகத்வம் ஜீவனுக்கு ஸர்வாத்மநா அஸம்பாவிதமன்ரே. ஆக அங்குஷ்டமாத்ரப்ரமிதனுன புருஷன் பரமபுருஷனே யென்று ஸித்தாந்திதமாயிற்று. அது ஸூத்ரத்தினுல் விவரிக்கப் படுகிறது—

ஸூ. சப்தாதேவ ப்ரமித:—1-3-23.

---

ப்ரமித:— அங்குஷ்ட பரிமிதனுகச் சொல்லப்பட்டவன் பரமாத்மாவே யாவன்; (ஏனென்னில்;) சப்தாத் ஏவ— *ஈசாநோ பூதபவ்யஸ்ய* என்றுள்ள சப்தத்தினுலேயே. என்பது ஸூத்ரத்தின் பொருள். பரமபுருஷனுக்கு அங்குஷ்டமாத்ரத்வம் எப்படி ஸம்பவிக்குமென்ன அடுத்த ஸூத்ரம் அந்த சங்கையைப்

பரிஹரிக்கிறது. ஸூ. ஹ்ருத்யபேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத். (1-3-24.) இதன் பொருள் கீழே விவரிக்கப்பட்டதாயிற்று. இதில் மநுஷ்யாதிகாரத்வாத் என்று எதற்காகச் சொல்லப்பட்ட தென்னில்; அங்குஷ்ட சூந்யங்களான குதிரை பாம்பு முதலான ஜந்துக்கள் விஷயத்தில் அங்குஷ்ட ப்ரமிதத்வம் சொல்லமுடியாதே யென்று சோத்யமுண்டாக, [மநுஷ்யாதிகாரத்வாத்] உபாஸநார்த்தமாக உபாஸக ஹ்ருதயத்தில் இருப்பதனுல்தானே அங்குஷ்டப்ரமிதத்வம் உபபாதிக்கப்பட்டது; அந்த உபாஸனத்திற்கு அதிகாரிகள் மநுஷ்யர்கள்; அவர்களுக்கு அங்குஷ்ட சாலித்வம் நிர்விவாதம்-என்று தெரிவிப்பது ஸூத்ரகாராபிமதம்.

இங்கு விஷய வாக்யத்தில் ஈசாந: என்றுள்ளது; *சம்புரீச: பசுபதி: சிவச் சூலீ மஹேச்வர:, ஈச்வரச் சர்வ ஈசாந:* இத்யாதி கோசங்களினுல் ஈசாந சப்தம் பசுபதியென்கிற தேவதாவிசேஷத்தில் ரூடமென்று அறிகிருேம். ஆக, *அங்குஷ்டமாத்ர: புருஷ:* என்னப்பட்ட புருஷன் நாராயணனல்லன், பசுபதி யென்பவனே-என்ருெருவாதம் கிளரும். இங்கு தத்துவமுணர்த்துகிருேம்; ஈசாந: என்று மட்டும் இங்கில்லை; "பூதபவ்யஸ்ய ஈசாந:" என்றுள்ளது. அதனுல் ஸர்வேச்வரத்வம் தெரிவிக்கப்படுகிறது. மேலே காட்டின கோசத்தில் ஈசாநபதம் போல் ஈச்வரபதமும் சம்புவினிடத்தில் ரூடமென்று தெரியவருகின்றது. அதுகொண்டு ஸர்வேச்வர: எனவருமிடங்களில் பசுபதியை அர்த்தமாகக் கொள்வதில்லையன்ருே. மேலும் விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் ஈசாந: என்கிறவிது விஷ்ணு நாமங்களில் ஒன்ருகவும் ஓதப்பட்டுள்ளது. ப்ரக்ருத விஷயவாக்யத்தில் "பூதபவ்யஸ்ய ஈசாந:" என்று ஸபஷ்டமாக விருப்பதால் ஸர்வேச்வரனுன நாராயணனே ச்ருதிவிவக்ஷித னென்பது நிஸ்ஸந்தேஹம். .... ... ... ... (18)

## 19. தேவதாதிகரணம்.

(இதுவும் முதலத்யாயம் மூன்ருவது பாதத்திலுள்ளது.)

கீழே *ஹ்ருத்ய பேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத்* என்கிற ஸூத்ரத்தில் பரமபுருஷனை உபாஸிப்பதில் மநுஷ்யர்களுக்குமட்டுமே அதிகாரமுள்ள தாகத் தெரிவிக்கப்பட்டது. அதன்மேல் அது தேவர்களுக்குமுண்டென்கைக்காக இவ்வதிகரணம் தோன்றுகிறது.

ஸூ. ததுபர்யபி பாதராயணஸ் ஸம்பவாத். 1-1-25. தத் :-அந்த ப்ரமாத்மோபாஸநமானது, உபரி அபி-மநுஷ்யர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களான தேவர்களிடத்திலும் ஸம்பவிக்கக் குறையில்லை; ஏனெனில்; ஸம்பவாத் - எவன் அர்த்தியோ, எவன் ஸமர்த்தனே அவன் அதிகாரி. என்பது நியதமாதலால் தேவதைகளுக்கு உபாஸநத்தில். அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் ஸம்பவிக்குமதாகையாலே இதி பாதராயணே மந்யதே. என்று ஸூத்திரத்தின் பொருள் அறியத்தக்கது.

ஒரு காரியத்தில் ஒருவர் அதிகாரியாக வேணுமானுல் இரண்டு வேண்டும். இது நமக்கு வேணுமென்கிற அபேக்ஷை முதலது; அதற்குரிய ஆற்றல் இரண்டாவது. இவையே அர்த்தித்வ ஸாமர்த்தியங்களெனப்படும். இந்திரன் முதலான தேவர்களுக்கும் ஸாம்ஸாரிகமான தாபத்ரயமுண்டாகி வருந்துவதையும், அதற்குப் பரிஹாரம் தேடுவதையும் ச்ருதீதிஹாஸ புராணங்களில் காணு நின்ருேம்.

ஆகையாலே அவர்களுக்கும் உபாஸனத்தில் அதிகாரமுண்டென்று கொள்ளக் குறையில்லை. என்பது இவ்வதிகரணத்தின் ப்ரமேயம்.

இங்குத் தோன்றும் பூர்வபக்ஷப்ரகாரம் என்னவென்றால்; தேவர்களுக்கு அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் உண்டென்று கொள்ளவேணுமானால் அவர்களுக்கு தேஹமுண்டென்று முக்கியமாகச் சொல்லியாகவேண்டும். விவேகம் விமோகம் முதலான ஸாதநஸப்தகத்தாலே அநுக்ருஹீதமான பரப்ரஹ்மோபாஸனம் அனுஷ்டிக்கப் படவேண்டில் சரீரமில்லாமல் அது ஸாத்யமன்று. அவர்களுக்கு சரீரமுண்டென்று ஸாதிப்பதற்கு ஒரு ப்ரமாணமும் காணோம், ஆகவே அவர்களுக்கு அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் ஸம்பவிக்கமாட்டாதென்று. இந்த பூர்வபக்ஷத்தைத் தள்ளுகிறது இந்த *தத்துபர்யபீத்யாதி ஸூத்ரம். * பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே * இத்யாதி ச்ருதி வாக்கியங்களினால் அபரிமிதஜ்ஞாந சக்தியுக்தனாக ஓதப்பட்டுள்ள பரம புருஷனிடத்தில் அவர்களுக்கு அர்த்தித்வம் ஸம்பவிக்கக் குறையில்லை. ஸாமர்த்தியத்திற்கும் குறையில்லை; படுதரமான தேஹேந்த்ரியாதிகள் தேவர்களுக்கு உண்டென்பதைப் பல சாஸ்த்ரங்களினால் நாம் அறியா நின்றோம்! உபநிஷத்துக்களில் ஸ்ருஷ்டிப்ரகரணங்களிலும் உபாஸன ப்ரகரணங்களிலும் இது ஸ்பஷ்டமாகவே காணப்படா நின்றது. ஸ்ருஷ்டி வாக்யங்களெல்லாவற்றிலும் தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவரரூபேண நான்கு வகைப்பட்ட ஸ்ருஷ்டி செய்யப்படுவதாக ஓதப்பட்டிரா நின்றது. தேவாதி பேதமானது தத்தத் கர்மாநுகுணமாக ப்ரஹ்மலோகம் முதலான பதினான்கு லோகங்களில் நேரும் பலன்களை அநுபவிப்பதற்கு யோக்யமான தேஹேந்த்ரியாதி ஸம்பந்தத்தைப் பொறுத்ததாகவுள்ளது. ஆத்மாக்கள் இயற்கையாகவே தேவாதிகளாக வுள்ளனவல்ல. சரீர பேதத்தால் தான் தேவ மநுஷ்யாதி வ்யபதேசம் விளைகிறது. வேதங்களிலும் உபநிஷத்துக்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் பல பல தேவர்களைப்பற்றின பல்வேறு கதைகளைக் கண்டும் கேட்டும் வருகின்றோம். * வஜ்ரஹஸ்த: புரந்தர: * என்றும் * தேநேந்த்ரோ வஜ்ரமுதயச்சத் * என்றும் * தௌ ஹ த்வாத்ரிம்சதம் வர்ஷாணி ப்ரஹ்மசர்யமூஷது:, தௌ ஹ ப்ரஜாபதிருவாச * இத்யாதி பரச்சத பரஸ்ஸஹஸ்ர வாக்யங்களினால் தேவர்களுக்கு சரீரமுடைமையையும் இந்த்ரியாதிபாடவமுடைமையையும் அறிகின்றோம்.

அன்றியும், இந்திரன் வாயு அர்யமா ப்ரஜாபதி முதலான பலபல தேவதைகளை யுத்தேசித்துக் காம்யேஷ்டிகளின் விதிகளும் அந்த இஷ்டிகளால் பல ப்ராப்தியும் கருமகாண்டங்களில் நிரம்ப ஓதப்பட்டிருப்பதால் அவர்களுக்கு சரீரமில்லையாகில் இதெல்லாம் பொய்யுரையாக ஆகவேண்டிவருமாதலால் தேவர்களுக்கு சரீரமில்லையென்று ஸாதிக்கவே முடியாது. பிரமன் இந்திரன் முதலான தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் மற்றுமுள்ளார்க்கும் தேஹேந்த்ரியாதிகளும் ஸ்வபாவ பேதங்களும் ஸ்தான விசேஷங்களும் போக விசேஷங்களும் க்ருத்ய விசேஷங்களும் ஸ்பஷ்டமாக ஓதப்பட்டிருக்கையாலே அவர்களுக்கு சரீரஸம்பந்தம் நிர்விவாதமாக வுண்டென்று கொள்ளக் குறையில்லையாதலால் அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் மநுஷ்யர்களுக்குப்போல தேவர்களுக்கு முண்டென்னத் தட்டில்லை. ஆக உபாஸநாதிகாரம் மநுஷ்யர்களுக்குமட்டுமன்று தேவர்களுக்குமுண்டென்று ஸ்தாபிக்கப்பட்டதாயிற்று.

(தொடரும்)

Rgd. No. 2975 **ஸ்ரீராமாநுஜன்**

**மிக முக்கியமான அறிவிப்பு:—** நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் மூலமாக ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பது உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... .... ( )

**நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—**

(1) **க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.**

(2) **M. A. KRISHNAMMAL, Advocate,**
**20, South Mada Street, Triplicane, Madras-5.**

(3) **A. RAMANUJACHARI, B. A.,**
**A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.**

---

**If un-delivered please return to:**

**P. B. ANNANGARACHARYA,**
**L. KANCHEEPURAM.**

---

... Vangeepuram Raghavacharya,
Melkote,
(Mysore State)




---

**Edited and Published by P. B. Annangaracharya Swami for Madras Satgrantha Prakasana Sabha.**

**Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press, Sannidhi Street, L. Kanchipuram.**